*Seek Truth wherever you can find it, But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்யம்வத.—**Speak the Truth.**

**"Hitch your Wagon to a Star."** **"To Thine Own Self be True."**



அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] [God is Love : Knowledge is Power : *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம் 14.] 1905-ம் ஸெப்டம்பர் மீ. [சஞ்சிகை 5.

SRI VIDYA OR THE HOLY SCIENCE OF

# "CHARACTER-BUILDING."

## II. Through Self-Development and Love of Service.

We have found that through them (Love to the fellow-man and Love to God) and through them alone, *true* greatness, power and success can come ; that through them comes the richest joy, the greatest peace and satisfaction this world can know. We have also found that, if one's desire is to make life narrow, pinched, and of little value, to rob it of its chief charms, the only requirement necessary is to become self-centered, to live continually with the little stunted self, which will inevitably grow more and more diminutive and shrivelled as time passes, instead of reaching out and having a part in the great life of Humanity, thus illimitably intensifying or multiplying his own. For each act of humble service is that divine touching of the ground which enables one to get the spring whereby he leaps to ever greater heights. We have found that a recognition of these two laws enables one to grow and develop the fullest and richest life here, and that they are the two gates whereby all who would must enter the Kingdom of Heaven.

*Around this great and sweet-incensed altar of love, service, and self-devotion to God and the fellow-man can and do all mankind bow and worship. To it can all religions and creeds subscribe ; it is the universal religion*

Have we it within our power to determine at all times what types of habits shall take form in our lives? In other words, is habit-forming, character-building, a matter of mere chance, or have we it within our own control? We have, entirely and absolutely. 'I will be what I will to be,' can be said and should be said by every human soul

The thing clearly to understand is this: That the thought is always parent to the act Now, we have it entirely in our own hands to determine exactly what thought we entertain. In the realm of our own minds we have absolute control, or we should have; and if at any time we have not, then there is a method by which we can gain control, and in the realm of the mind become thorough masters.

Here let us refer to that law of the mind which is the same as is the law in connection with the reflex nerve system of the body, the law which says that whenever one does a certain thing in a certain way it is easier to do the thing in the same way the next time, and still easier the next, and the next and the next, until in time it comes to pass that no effort is required, or no effort worth speaking of; but, on the contrary, to do the opposite would require the effort. The mind carries with it the power that perpetuates its own type of thought, the same as the body carries with it through the reflex nerve system the power which perpetuates and makes continually easier its own particular acts. Thus a simple effort to control one's thoughts, a simple setting about it, even if at first failure is the result, and even if for a time failure seems to be the only result, will in time, sooner or later, bring him to the point of easy, full, and complete control."—*New Thought Notes from Trine in the Pr. Bharata.*

## "மதிவளர்வித்தை," அல்லது, ஸ்ரீவித்தை.

### பெற்ருேர், பிரதமவித்தியாபோதகாசிரியர்களுக்கு.

### II. அஹம்விருத்தி, பரசேவை,—ததாகார-சின்மாத்திரம்.*

"திருமறை வணக்கம்"

"மலைமகள் துணைவன் முக்கணன் நீல மணிமிடற்றவனெனவானோர்
திலகனேயுன்னைத் தகரமாங்குகையுட் தியானஞ்செய்திடு முறைசெப்பி
அலரவன் முகுந்தன் ஈசனோடெவையும் ஐயநின் விபூதியென் றுரைக்கும்
மலவிருள் துமித்துச் சிவச்சுடர்விளக்க வந்த கைவல்லியமறையே!"—
—தீதுடையுள்ளத் துணையுறைச்செப்பியதோரபாரதமும்
பொறுத்தெனையாண்டே தகைத்தருள்போதப்புன்மைவாசனையறத்தீரவே.

"தந்தைமதியாலுதித்து தாரணியிலுஞ்சிலநாள்
வந்துபிறந்துபுவிமாய்கைதனிலேயுழன்று
அந்தமதியாலெனது ஆகமக்குருக்களினல்
விந்தைசிலநாள்கிரியை மெய்யென்றிருந்தேனே."

"பொய்க்குருவினலெனது பொக்கிஷமெல்லாஞ்சிதைந்து
கைப்பொருளெல்லாமிழந்தேன் காரியகுருக்களினல்
இப்படியாய் மேதினியில் யான்சிலநாள்போனபின்பு
மெய்க்குறமுனியருளால் மெய்ஞ்ஞானம் பெற்றேனே."

சென்ற சஞ்சிகையில் சகவாச, உபவாசபலனைக வரும் சங்கம், சாந்தம் என்னுமிரண்டின் குணங்குறிகளைச்சொல்லி அவையிரண்டும் குழந்தைகளுக்கு இயற்கையாயிருத்தலால், அவை நமது சகவாசதோஷத்தால் நஷ்டமாகாதபடிக்கும், உபவாசக்குறைவால் (உண்மையாகப்போற்றும் வழியறிந்து போற்ருமையால்) பங்கம் வராதபடிக்கும் பாதுகாக்கவேண்டுமென்று சொல்லி வற்புறுத்தக்கூறினேம். குழந்தைகளுக்கு ஐந்துவயதாகவும் கர்ப்பவாசனை நீங்கி, உலகவாசனை படியுங்காலமாகையால் பிரகிருதிஸ்வபாவமாகவுண்டாகும் அகங்கார அஜ்ஞானவிருத்தியை நல்வழியிற்செலுத்த வித்தியாப்பியாசம் செய்து "ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்" என்று இருப்பதால், ஹரி நாமத்தையுபதேசஞ்செய்து "எல்லாம் ஸ்ரீமந் நாராயணனுடைய இஷ்டம்; அவனுக்கு என்னை அற்பிதமாய்க்கொடுத்து நமஸ்கரிக்கிறேன். எல்லாம் அவனருளாலே ஸித்தியாகக்கடவது" என்று பொருள்படும் "ஓம் நமோ நாரா

* 'அஹம்விருத்தி' படிப்படியே முடிவில் பூரணஹங்காரத்தையும், 'பரசேவை' அங்ஙனே பரஸ்வரூபத்தையும் பலனைத்தரும். இதையே சுருக்கி 'ததாகாரம்'—'சின்மாத்திரம்' என்று பலன் கூறுவான் எதிரே காட்டியுள்ளோம்.

யனுபவித்தும்'' ("Thy Will be done") என்கிற மந்திரத்தை ஸரஸ்வதியை முன்னிட்டு முறைப்படியுபதேசஞ்செய்து, பக்திவித்தை முதலியவன்றி, பிறகு அ, ஆ முதலிய அக்ஷராப்பியாசம் செய்ய வேண்டுமென்று சொன்னோம். இப்படி எதையும் தெய்வவணக்கத்தோடு செய்யப்போதிக்கப்பட்ட குழந்தைக்கு அகங்காரவிருத்தி நாளுக்குநாள் அதிகரித்து "நான்" "எனது" என்கிற அகங்கார மமகாரங்கள் வளர்ந்துவரும். இந்த அகங்கார மமகாரவிருத்தியை மூளையில் கிள்ளியெறிவது நல்லது என்று சிலர் நினைக்கலாம். அது சுத்தப் பிசகு. அப்படியொன்றும் செய்யவேகூடாது. செய்தால் மஹாபாபம். ஏனென்றால், அகங்கார மமகாரவிருத்தியால்தான் சீவன் இவ்வுலகத்தின் சுபாவத்தை அனுபவரீதியாக அறிந்துணரவேண்டும். பிரகிருதிவசத்தனாலொழிய பிரகிருதியனுபவம் கிட்டாது. அப்படியானால் அகங்கார மமகாரவிருத்தியை யேன் நீக்கவேண்டுமென்று மேலோர் இடைவிடாது வற்புறுத்திக் கூறுகிறார்களென்று கேட்கலாம். ஒருவன் தன் பலத்தைப் பரீக்ஷித்துப் பார்த்துக் கொள்ளவேண்டுமானால் தான் உண்டு கொழுத்து உறமேறப் பெற்றதற்குச் சரியாகத்தன்னை பலமாகக் கட்டச்சொல்லி அக்கட்டை முறித்துக்கொண்டு தன்னை விடுவித்துக்கொள்வதில் தன் சாமர்த்தியத்தைக் காட்டினால் அது அவனுடைய தீரத்துக்கு அத்தாக்ஷியாம். ஸாம்ஸன், ஸாண்டோ, என்னும் பலசாலிகள், புஜபல விருத்தியைப்போற்றி வளர்த்துப் பின்னர், தங்களைச் சங்கிலியால் கட்டுண்டு காட்டி, அச்சங்கிலியை முறித்துக்கொண்டு அக்கட்டை விடுவித்துக்கொள்வதில் தங்கள் பலத்தையும் சாமர்த்தியத்தையும் காட்டினார்கள். பலமில்லாத ஒருவன் அவர்களைப்போல் தானும் சங்கிலியால் கட்டுண்டு கிடந்தால் அவனுக்கு அவர்களுடைய பலம் வருகிறவரையில் மீட்சியின்றி வருந்தி வாடிக் கரைந்துபோவான். அதுபோல இந்தச்சீவனும் தனு கரண புவன போகாதிகளை யெல்லாம் பெற்றது அவற்றால் கட்டுண்டு மீட்டும் அக்கட்டை யறுத்துக்கொண்டுபோகும் சக்தி தனக்குண்டென்று காட்டி அதனால்வரும் ஒரு ஆனந்தத்தை யனுபவிக்கவேயன்றி வேறொன்றுக்கு மல்ல. அதனால்தான் பெரியோர்கள் இப்புவன போகாதிப் பிரபஞ்ச விருத்தியையும் அதன் க்ஷயத்தையும் லீலாவினோதமென்று சொல்லிக் காட்டுகிறார்கள். குழந்தைகளுக்கு அகங்கார மமகாரவிருத்தி யுண்டாகாவிட்டால் உலக ஞானமின்றி உலகத்தை யனுபவிப்பது கூடாது. ஆனால் உலகத்தை அனுபவிக்கத்தானே எத்தனையோ பாடுபட்டு இந்த ஜன்மமெடுத்து வந்தது—அதை முற்றும் அனுபவிப்பதைவிட்டு ஏன் இந்தக் கீழ்மேல் யோசனையெல்லாமென்று ஒரு கேள்வி பிறக்கலாம். உலகத்தை யனுபவித்து அதன் சாரத்தைக்கிரகிக்கவேண்டியதேயன்றி அதில் அகப்பட்டுக்கொண்டு சுழன்று தவிப்பது சுகிர்தமல்ல. கரும்பைத் தின்பது அதன் சாரத்தை யுருசியறிந்து உட்கொள்ளவேயன்றி சாரத்தோடு சக்கையையும் விழுங்கித் தொண்டையில் சிக்கிக்கொண்டு சாவதற்கல்ல. அப்படிப்போல, உலகத்தை யனுபவிக்கவும் வேண்டும்; அதன் வலையில் மீட்சியின்றி சிக்கிக்கொள்ளவும் கூடாது. "மாவுக்கும் ஆசை பணியாரத்துக்குமாசை" யென்கிற கதையாகவிருக்கிறதே! இதெப்படி சாத்தியமென்று கேட்கலாம். அப்படியல்ல: மாவும் பணியாரமும் தேகத்துக்கு பலங்கொடுப்பதற்கான உபகரணங்களேயன்றி, கண்டபடி தின்று தேகத்துக்கு வியாதி வருவித்துக்கொள்வதற்காக அமைந்த சாதனங்களல்ல. ஆகையால் புத்திசாலி கொஞ்சமாவைச் சுட்டு பணியாரமாக்கித் தின்னு அதனால் வந்த பலத்தைக் கொண்டுழைத்து தானியந்தேடி

வந்தானால், மாவும் பணியாரமும் குறைவின்றி யவனுக்குக் கிடைக்கும், அஃதோடு தேகபலமும் அதிகப்பட்டு அவன் உன்மத்தனாவான். உலகானுபவம் என்பது சுகதுக்க ரூபமானதன்றி வேறுதன்மை யதற்கின்மையால், சுகதுக்கங்களிலே யகப்பட்டுழன்று களைமூண்டு சாகாதபடி சற்று இளைப்பாற அவகாசம் வேண்டும். "ஸம்ஸாரம் ஸாகரம் துக்கம்" என்று இருப்பதால் இந்த இளைப்பாறுதல் அல்லது விச்ராந்தி அல்லது சாந்தோதயம், அகங்கார மமகாரவிருத்தியால் கிடைக்கத்தக்கதன்று. ஆகையால் குழந்தைகளுக்குப் பிரகிருதிஸ்வபாவமாகவுண்டாகும் அகங்கார விருத்தியைத் தடுக்காமல் அதை நல்வழியில் செலுத்தி வளரவிடவேண்டும். "நான்" "எனது" என்னும் அகங்காரமமகார விருத்தியால்வரும் ப்ரவிருத்தியை "நீ" "உனது" என்கிற "பரார்ப்பணரூப" நிவிருத்தியால் தகைத்துக்கொண்டே வந்தால் அப்பொழுது அகங்காரமமகார விருத்தி பெருகிவளர்ந்தும் தன்னைத் துன்பத்துக்காட்படுத்தும் காடாரம்பமாகாமல், அழகிய நந்தவனம்போல் தனக்கும் பிறருக்கும் சந்தோஷத்தைக்கொடுக்கும் (ஸத்குண ஸம்பன்னாகாரப்) பூந்தோட்டமாக வளர்ந்து இகபரசுகமிரண்டையும் அளிப்பதாகும். அது எப்படியென்றால்:—குழைந்தகள் நான்தான் அது செய்வேன் என்று முன்னுக்கு வரும்பொழுது அகங்கார விருத்தியால் ஏவப்பட்டு அப்படிக் கர்பதுரந்தரராக வருகிறார்கள். அப்பொழுது அவர்களைத் தடுக்காமல், "அப்பா இங்கே வா, நீ இதைச் செய்; ஆனால் பிறருக்கு அதனால் துன்பமின்றி இன்பம் விளையும்படியாக இப்படி இப்படிச் செய்" என்று வழிகாட்டவேண்டும். குழந்தைகளுக்கு அப்பொழுது செய்கையொன்றே பிரதானமாதலால், அந்தச் செய்தொழிலைச் செய்வதொன்றினால்வரும் ஆனந்தமே அவர்களுக்குப் பெரிதாம். தாம் செய்யுந்தொழில் பிறருக்கு இன்பம்விளைக்கிறதா துன்பம்விளைக்கிறதா என்கிற ஞானம் அவர்களுக்கு அப்பொழுது இல்லை. அவர்கள் செய்தொழில் எதுவானாலும் அதனால் அவர்களுக்குண்டாகும் உள்ளானந்தத்தை அத்தொழிலின் பயனாக நேரிடும் பிறரது இன்ப துன்பத்தோடு அறியாமையால் ஒட்டவைத்து அந்தக் காகூஷியில் ஒருவித சுகத்தையனுபவிக்க அப்பொழுதுதான் முதல்முதல் கற்றுக்கொள்கிறார்கள். ஒரு குழந்தை ஒரு பூனைக்குட்டியை வைத்துக்கொண்டு விளையாடக்கருதி அதன் வாலைப்பிடித்திழுத்தும் காதைப்பிடித்திழுத்தும் மயிரைப்பிடித்திழுத்தும் விளையாடுகிறதென்று வைத்துக்கொள்வோம். அந்தக்குழந்தைக்கு அப்பூனைக்குட்டியை வதைக்கவேணுமென்கிற எண்ணமுமில்லை, அதை வதைக்கிறோமென்கிற அறிவுமில்லை. அதற்கு வேண்டியதெல்லாம் அப்பூனைக்குட்டியைத் தொட்டு விளையாடவேண்டும். அப்படி விளையாடுவதில் அது என்ன செய்கிறதென்று பார்ப்பதினால் அதற்கு ஒருவித நூதன அனுபவம் பிறக்கிறது. பூனைக்குட்டியைத் தொடக்கூடாதென்று கண்டித்தால் அது கேட்காது. ஆனால் "அப்பா, பூனைக்குட்டியை வாலைப்பிடித்திழுக்காதே அதற்கு வலிக்கும்; வலித்தால் உன்னைக்கடிக்கும். அதைக் கிட்ட வைத்துக்கொண்டு தலையிலிருந்து வால்பக்கமாகத் தடவிக்கொடு; அது சுகமாக உன்னிடத்தில் ஒட்டிக்கொண்டு தூங்குகிறாப்போல் கண்ணை மூடும் பார்" என்று சொல்லி அப்படி இரண்டொருதரம் செய்துகாட்டினால், அதற்குத் தனது உள்விருத்திக்குத்தக்க தொழில் கிடைப்பதோடு பஹிர்முகத்திலும் 'பரஹிம்ஸை' தோஷமின்றி 'பரசாதக' சுகிர்தமுண்டாகிறது. இப்படியாகத், தான் அனுபவிக்கும் உள்ளாநந்தத்தோடு பரஜீவன்களின் ஆனந்தத்தையும் பார்த்துமகிழக் கற்றுக்கொள்கிறான். இதனால் ஜீவகாருண்யம் முளைத்து

விருத்தியாகிறது. இப்படியே ஒவ்வொன்றுக்கும் மனோதர்மத்தை யொட்டி விளையாட்டிலே வித்தைபோதிப்பது தான் "கிண்டர்கார்டன் முறை" யென்று சொல்வது. "அஹிம்ஸா பரமோதர்ம:" என்கிற ஜீவகாருண்ய தர்மத்தை இவ்விதமாக இளம்பருவமுதல் குழந்தைகளுக்குப் படியவைக்கவேண்டும். இப்படியே ஒவ்வொரு நற்குணமும் நன்னடக்கையும் இயல்பாக அமையப்பார்க்கவேண்டியது. இப்படி யிளம்பிராயத்தில் குழந்தைகள் வளர்க்கப்பட்டு வந்தால், பிறகு அவர்கள் சுபாவமாக ஸத்குணசம்பத்துப்பெற்று விளங்குவார்கள். குணமும் நடத்தையும் வெளிப்படாத குழந்தைகளுக்கு விவாகம் செய்யுங்கால் குலம் கோத்திரம் பார்ப்பது இதற்காகத் தான். நல்லகுலத்தில் பிறந்து வளர்ந்த குழந்தைகளாயிருந்தால் நன்னடக்கை இயல்பாக அமையப் பெற்றதாயிருக்கும். "தாயைப்போல பெண், நூலைப் போல சேலை" என்பதன் உள்ளர்த்தமும் இதுதான்.

இப்படி குழந்தைகளுக்கு இளம்பருவத்திலே ஜீவகாருண்ய முண்டாமாகில் அவர்கள் உலகவித்தைகளாம் ஸர்வகலைகளையும் உண்மையாகவே ஸ்ரீவித்யாப்பியாசமாக வுணர்ந்து கொள்ளத்தக்கவர்களாகிறார்கள். பிரகிருதி மர்மங்களை யுணர்ந்துகொள்வதே எல்லா வித்தையின் முதல் நோக்கமாம். நல்ல ஹிருதயமுள்ளவர்கள் மேன்மேலும் உண்மையை யுணர்ந்துகொள்ள யோக்கியதையும் பக்குவமு முள்ளவர்களாகிறார்கள். கெட்ட ஹிருதயமுள்ளவர்கள், ஆயுதப்பிரயோகமறியாத வேலைக்காரன் தான் கையாடும் ஆயுதங்களால் தனக்குத்தானே கெடுதி விளைத்துக்கொள்வது போல, பிரகிருதிமர்மங்களின் விதி விலக்கறியாது தாமறியாமல் தமக்குத்தாமே தீங்கிழைத்துக் கொள்கிறார்கள். சூக்ஷ்மாதிசூக்ஷ்மமான பிரகிருதிமர்மங்களை யுணரவேண்டுமானால், சாந்தோபசாந்தமாயிருந்து உண்மையை உணர்வதிலேயே கண்ணும கருத்துமாக விருக்கவேண்டும். ஹிருதயபரிசுத்தமில்லாதவன் "தன்வினை தன்னைச்சுடும்" என்கிற விதிப்படி தான்செய்த கர்மங்களால்வந்த கர்மபந்தங்களில் கட்டுண்டு தவிப்பான். அப்பொழுது அவனுக்கு சாந்தோபசாந்தமும், சூக்ஷ்மபுத்தியும் எங்கே யிருந்துண்டாகும். வீணைக் கெட்டழிந்து குளிக்கப்போய் சேற்றைப் பூசிக்கொண்டவன் கதையாக, பிரகிருதி மர்மங்களை யுணரப்போய் சுகிர்ததர்மங்களை யிழந்து இகபரமிரண்டிற்கும் பிரஷ்டனாகிறான். ஆகையால் ஸ்ரீவித்தையைப் பூர்ணமாக அப்பியசிக்க விரும்புகிறவர்கள் ஹிருதயசுத்தத்தோடு இருந்து உபாசனாவிதிப்படி யனுஷ்டிக்கவேண்டும். உபாசனாவிதிகளின் உட்கருத்தெல்லாம் ஜீவகாருண்யம், ஸ்வயநயமின்மை, பரவணக்கம், பரோபகாரம் இவற்றை விருத்தி செய்யவேண்டு மென்பதன்றிவேறல்ல. இதற்காகப் பெரியோர்கள் பற்பலவிதத்தில் சரியை, கிரியை, யோகம் முதலான பஹிர்முக, அந்தர்முக சாதனங்கள் பலவாக ஏற்படுத்தியிருக்கிறார்கள். எவ்விதத்திலும் குழந்தைகளுக்கு பயபக்தி வணக்கம் பிரகிருதிவஸ்துக்களெல்லாவற்றிலும் சிறுபிராயம் முதலே அமைந்திருக்கப் பழக்கி வரவேண்டும். ஆதலால் "ஓம் நமோ நாராயணாய" என்பது பெரிய மந்திரமாக ஓதப்படுகிறது. 'ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்' என்றுள்ள "பிரணவ மூர்த்தியாகிய நாராயணன்பொருட்டு நான் வணங்குகிறேன் அல்லது நமஸ்கரிக்கிறேன்" என்பது இதன்பொருள். பரவணக்கமிருந்தால் தன்னிடத்தில் பெருந்தகையும், தன்மதிப்பும் தனக்குக் கெடுதலின்றி யமைந்து பேருதவி செய்யும். பரவணக்கமில்லாவிடில் இவை யெல்லாம் தற்பெருமையாகி வீண் அகங்கார விருத்தியை யுண்டுபண்ணி உளக்கண்ணைக் கெடுத்து "அகம் பாவத்தாலே யழிந்தான் துரி

யோதனன்'' என்கிறவாக்குக் கொப்பத் தன்னழிவுபயப்பதாயிருக்கும். ஆதலால் ஸ்ரீவித்தையாகிய திருமறை வணக்கம் தப்பாது யாரிடத்திலும் இருத்தல்வேண்டும். ஹிருதயத்தில் ஒரு சிறுது ஆரம்பாவ மிருப்பினும் அது சூறைக்காற்றிலகப்பட்ட துரும்புபோல் ஒருவனைப் போட்டு ஆட்டிச் சுழற்றிவிடும். உண்மையாக உள்ளபடி ஸ்ரீவித்தை யப்பியாசம் செய்ய வேண்டிய வழி யிப்படியிருக்க, நம்முள் வைதீககோஷ்டிகளும், சமயாசாரியர்களும், பிராயச்சித்தம் என்றும் அந்த ஹோமம் இந்த ஹோமம் என்றும் முத்திராதானம் என்றும் சொல்லி பலவிதத்திலும் அவர்களை நம்பியுள்ள சிஷர்களிடத்திலிருந்து பணத்தைப் பறித்துக்கொண்டு அவர்களுக்கு வினையைவளர்த்து விடுகிறார்களே! இதற்கென்ன செய்கிறதென்று ஒரு கேள்வி பிறக்கலாம். ஜாதிமதசமயாசார அனுஷ்டானங்களுக்குக் கட்டுப்பட்டிருக்கிறவரையில் இவர்கள் நிர்ப்பந்தங்களுக்குட்பட்டே தீரவேண்டும். அஞ்ஞானவிருள் நீங்காதவரையில் ஜாதிமதாசார தர்மங்களை மீறி நடப்பதும் அசாத்தியமே. கர்மங்கள் ஹிருதயசுத்திக்காகவேற்பட்டன. ஹிருதயசுத்தி பூரணமாய் ஸித்திக்கிறவரையில் கர்மங்களை விடக்கூடாது. ஹிருதயசுத்தியினால் மனது துல்லியமாகவாக உண்மை தானாக விளங்கும். அப்பொழுது கர்மங்கள் தாமாகக் கைநழுவிப்போம். திருவள்ளுவர் முதலான மஹா ஞானிகளும் இப்படி சில காலம் மயங்கினார்களென்றால் மற்றவர்களுக்குக் கேட்பானேன். "ஆகமக்குருக்களினால்'' "கிரியை மெய்யென்றிருக்கும்'' சிந்தை சிலகாலம்வரையில் விடாது. பிறகு பரிபக்குவம் வந்தக்கால் அது "விந்தை'' யென்று படும். வைதீகர்களையும் ஆகமக்குருக்களையும் விட்டொழித்து ஸதாசாரியனைத்தேடி யலைந்து உண்மையை யுணர்வோமென்றால் ஹிருதயசுத்தி பூரணமாக சித்திக்கிறவரையில் ஸத்குருகடாக்ஷம் கிடைக்கிறதில்லை. அவர் நமது ஹிருதயத்துக்குள்ளேயே நித்யவாசியாகவிருந்துஉண்மையைப்போதிக்க இவன் எப்போ நம்மிடம்வருவான் (அகமுகம் திரும்புவான்) என்று காத்துக்கொண்டிருக்கிறார். அவரை நாடாது நாம் பஹிர்முக நாட்டத்தால் கெட்டலைந்து திண்டாடினால் "காரியகுருக்கள்'' எத்தனையோபேர்கள் நம்மையேமாற்றிக் கைப்பொருளெல்லாங் கொள்ளக் காத்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களிடத்தகப்பட்டுத்திண்டாடித் தேறினபின் ஹிருதயகமலவாசியாகிய "குறுமுனி'' யருள் பெற்று மெய்ஞ்ஞானம் பெறுகிறோம். இதைத் திருவள்ளுவர் நன்றாகச் சொல்லியிருக்கிறார். இப்பிரபந்தத்தின் முதலில் அவர் வாய்மொழியை யெடுத்தாண்டிருப்பினும் அதை யிங்கு மொருமுறை கூறுவதமையும். அவர் வாக்கிது :—

"பொய்க்குருவினாலெனது பொக்கிஷமெல்லாஞ் சிதைந்து
கைப்பொருளெல்லா மிழந்தேன் காரிய குருக்களினால்
இப்படியாய் மேதினியில் யான் சிலநாள் போனபின்பு
மெய்க்குறுமுனியருளால் மெய்ஞ்ஞானம் பெற்றேனே.''

இப்படி ஸதாசாரியனாகிய ஸத்குருவின் பூரணகிருபை கிடைத்துவிட்டால் அப்புறம் அண்டபிண்டமெல்லாம் ஒன்றாயளந்து பார்க்கலாம். தத்துவங்கள் தொண்ணூற்றாறையும் "எண்சாணுடலதினில்'' கண்ணாரக்கண்டு நியதிகளையலாம். தத்துவதரிசனமானால் சீவனுக்குப் பெந்த காரணமாகிய மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை மூன்றும் தானே விட்டுப்போக, விண்ணாசையுள்ளத்தே குடிகொள்ளும். விண்ணாசையுள்ளத்தே யசையாது குடிகொண்டால் ஈசனே நேரில் வந்து ஆசைமுற்றுமறுத்து ஆத்மஞானானந்த அனுபவ

மளித்து ஆதரிப்பான். இந்த ஈசனை அப்பனயுபாசிப்பதிலும், அம்மையாக உபாஸிக்கின் உபாசகனிடத்துள்ள குற்றங் குறைகளைத் தாய்போல் பொறுத்துத் தவறுகளெல்லா மொழித்து நித்த சுத்தனாக்கி "நித்த சுத்த புத்த முக்த" நிர்வாணசுகமளிப்பான். இதை ஒரு ஸித்தர் வெகு நன்றாகச் சொல்லியிருக்கிறார்:—

"எண்சாணுடலதினில் எய்தும் தொண்ணூற்றாறுவிதம்
கண்ணாரத் தத்துவத்தின் சாக்ஷியெல்லாம் கண்டுணர்ந்து
மண்ணாசை பெண்ணாசை மாய்கைபொருளாசைவிட்டு
விண்ணாசைகொண்டுநெறி மெய்ஞ்ஞானம் பெற்றேனே."

"முதலிருந்தவல்வினையை முப்பாழைச் சுட்டுமனம்
பதராமலும் மதியால் பாடுபட்டேன்—முதலிருந்த
நல்வினையுந்தீவினையு நாடாமலும் பறந்து
வல்வினையைப் போக்கிவிட்டேன் வாறு."

இப்படியாக ஸ்ரீவித்தையாம் "மதிவளர்வித்தை"யால் புத்திகூர்மை ஏற்பட்டு ஆத்ம புத்தி பிறந்து வளர்ந்து கடைசியில் அது நல்வினை தீவினையெல்லாம்விட்டுப் பறந்தோடி "வல்வினை"யாம் பாசபந்தத்தைப் போக்கிவிடத்தக்க வன்மையளிக்கும். ஆதலால் அஹம் விருத்தியோடு பரசேவையும் பொருந்தக், குழந்தைப்பிராயமுதல் பழக்கி அப்பியாசத்துக்குக் கொண்டுவந்தால் காலமுதிர்வில் அகங்காரவிருத்தி தானே பரசேவைக்குக் காரணமாகி பரோபகாரவிருத்தியாக மாறி, பரோபகாரவிருத்தியால் ததாகார விருத்தியுண்டாகி அதனால் சீவேசுவரபேதம்நீங்கி, துவம்பத லக்ஷியார்த்தமும் தத்பதலக்ஷியார்த்தமும் "ஏகதேச பாகத்தியாக லக்ஷணையால்" ஏகரஸமாகி ஐக்கியப்பட்டு விளங்கக்கண்டு, அந்தத் ததாகாரவிருத்தியிலிருந்து பழகப்பழகத், தன்மை முந்நிலை யிழந்துநிற்கும் "தானே தானாய்விளங்கும்" சின்மாத்திரமாகமிஞ்சிநிற்கும் "நெஞ்சுநிறை பூரணத்தை" அஞ்சாது துஞ்சாது அனுபவிக்கலாம். இதன் உட்கருத்தை ஆய்ந்தோய்ந்து ஆரத்தீர யோசித்து ஹிருதயசுத்தியோடும் பாடுபட்டுழைப்பவர்களே யுள்ளபடி யறிவார்கள். அறுபத்துநாலு கலைக்ஞானங்களும் இகமொன்றுக்கே சாதனமாம். ஆனால் இந்த உத்தமமான ஸ்ரீவித்தையோ இகம்பரமிரண்டுக்கும் சாதகமாய் இகபோகத்தையும் பரசுகத்தையும் ஏககாலத்தி லளிக்கத்தக்கதாம். ஆதலால் இந்த "மதிவளர்வித்தை"யின் பெருமையைச் சொல்லிப் புகழ யாராலே யாகும்! அகஸ்தியர் முதலான மஹரிஷிகளும் ஸித்தர்களும் இந்த ஸ்ரீவித்தையை அரும்பாடு பெரும்பாடு பட்டுத் தேடி அதிபக்திவிநயத்தோடும் சேவித்துக் கொண்டாடினார்களானால் மற்றப்படியுள்ள சாமான்யர்களோ இதன் பெருமையை அறியவல்லார்! வயிற்றுப் பிழைப்புக்காக வாய்ச்சாலஞ் செய்து நானும் ஸ்ரீவித்தை யுபாஸகன் என்று சொல்லும் வேஷதாரிகளோ இதனுண்மையை யுணரவல்லார். உடல்பொருளாவியையு மொருங்கே கொடுத்துத் தேடிய பெறற்கரிய பேரும் முத்தியையும் அம்பிகைபாதத்தில் அற்பணஞ்செய்யத்தக்க தீரன் யாவனோ அவனே ஸ்ரீவித்தையுகக்கும் ஸத்புருஷசிங்கமாகிறானென்றால் மற்றவர்களைப்பற்றிப் பேசலவும் வேண்டுமோ. அப்படிப்பட்ட மஹாபுருஷர்கள் அவளை ஏகாக்ஷரியாகவும் த்வைதாக்ஷியாகவும், மூன்று, ஐந்து, முதலாகப் பதினைந்து பதினாறு அக்ஷரங்களில்

வசிக்கிறவளாகவும், எங்கும் நிறைந்த மோனாக்ஷரத்தில் வசிப்பவளாகவும் அவர்களது மந்திரசக்தியால், கடுகைத்துளைத்துக் கடலை யடைத்தாற்போல், அண்டபிண்டங்களெல்லாம் நிறைந்தும் நிறையாத அகிலாண்டகோடி பிரம்மாண்டநாயகியை பக்திவலைபோட்டுப் பிடித்து ஸ்ரீசக்கரமென்னும் கூண்டிலடைத்து அவளது திவ்யாக்ஷர மந்திரோபதேசமெனும் கிளிமொழி பகரக்கேட்டு ஆனந்தபரராய் அத்யாத்மிக தாபந்தணிந்து ஆனந்தாதீதமாய் சகஜநிஷ்டையில் எல்லாமொன்றாகப்பாவிக்கும் அத்துவிதநிலை குலையாது கிருதகிர்த்தியர்களாகி என்றும் அழியாத நித்தியவாழ்வுற்று விளங்குவார்கள்.

ஓம் தத்ஸத்.

## தேவிஸ்தோத்திரம்.

"ஏகாக்ஷரத் துவைதாக்ஷரீ, த்ரேதாக்ஷரீ, பஞ்சாக்ஷரீ, நெஞ்சுநிறை
பஞ்சதசாக்ஷரீ! வாலை, வித்தை, அம்பிகை, தேவி! தயவுநிறை
ஷோடகசாக்ஷரீ! யெங்குநிறை மோனாக்ஷரீ! கசடுநிகு
நிரக்ஷரகுக்ஷியான் நித்யநிர்மலஸ்வரூபிநீ—ஆயினு
மெனையுனக் கர்ப்பணஞ்செய்கிறேன் அங்கீகரித்திவனை
யாளாக்கி விடும்பொருட்டுன் திவ்யாக்ஷரமந்த்ரோப
தேசஞ்செய்தருள்வாய்! தாயே! தயாபரியே!

* * *

"ஏழையேன் துன்புற்றுத் துயரிலாழ்ந்தேன் அம்பிகே!
கோழைமனங் குடிகெடுக்காதென்னைக் காத்தருளத்
தயவுமிக வேண்டுந்தாயே! தற்பரமாயெங்கு நிறை
ஸகஸ்ரதள மலர்மீதுறையம்பிகே யுன்ஸ்வ—
ஸ்வரூபங்காட்டித் தன்மயமா யுன்னோடைக்கியம்
தந்தருளவேண்டுந் தாயே! மீண்டுமெனை மாயைபற்றா
தாண்டருள்செய் தயாநிதேயுன் பாதமதேசரணமம்மா!
காத்தருள்செய் அம்பிகே! அபயம்! அபயம்!!"

ஓம் மஹாத்ரிபுரஸுந்தரியை நம:

பூரணஸித்தர்கள் அநுபவம்.

"ஆமையொன்றேறி யகம்படியானென
வோமவென்றோதியெம்முள்ளொளியாய் நிற்கும்
நாமநறுங்குழற்றையலைக்கண்டபின்
சோமநறுமலர் சூடிநின்றானே."

"அண்டமுதலாயவனிபரியந்தங்
கண்டதோன்றில்லைகனங்குழையல்லது
கண்டனுங்கண்டியுமாகியகாரணங்
குண்டிகைகோளிகைகண்டதனாலே."

வாயுமனமுங்கடந்த மனோன்மனி
பேயுங்கணமும் பெரிதுடைப் பெண்பிளை
ஆயுமறிவுங்கடந்த வானுக்குத்
தாயுமகளு நற்றாரமுமாமே"—திருமூலர் திருமந்திரம்.

ஸத்யாநந்த:

# "The Reveries of a Bachelor."

A STUDY IN "THE ASSOCIATION OF IDEAS" AND THE LAW OF MENTAL HABIT.

(By A Confirmed Bachelor.)

God is the Bride or Bridegroom of the Soul. Heaven is not the pairing of two, but the communion of all souls. We meet and dwell an instant under the temple of one thought and part as though we parted not to join another thought in other fellowships of joy."—*Emerson.*

"It was the 16th of— 19 –. My bride lay stretched on my lap with heavenly wreaths and garlands bedecked Gathering her fast expiring strength, she made an effort and thus clearly spake:—" My sweet, my love, the apple of my eye, my soul, this parting from thee I cannot bear........Yes, yes, this body is but the garment of our souls; 'we are spirits and as spirits we lived', and now this parting is but to meet again in Love, and henceforth we are one, the eternal changeless indivisible One. Whithersoever the Heavenly Reaper may take me now away from thee to thee again will I return, my love, to be thy companion and share thy life: And promise me, Love, that thou forget'st me not until the end of thy worldly life, and I promise thee, TO WHATEVER WORLD I GO, BACK WILL I COME TO THEE QUICK AND TRUE. THIS MY LAST WORD AND PLIGHTED TROTH AND I SEAL IT IN HEAVEN'S NAME WITH THIS MY LAST ETERNAL KISS"—*Scene from Real Life*

"On you has fallen the greatest blow that could ever befall a man."—*An English Friend.*

"Man is but a reed, weakest in nature, but a reed which thinks. It needs not that the whole universe should arm to crush him. A vapour, a drop of water is enough to kill him. But were the Universe to crush him, man would still be more noble than that which has slain him, because he knows that he dies, and the Universe has the better of him. The Universe knows nothing of this.

"Not from space must I seek my dignity, but from the ruling of my thought. I should have no more if I possessed whole worlds. BY SPACE THE UNIVERSE ENCOMPASSES AND SWALLOWS ME AS AN ATOM, BY THOUGHT I ENCOMPASS IT."—*Pascal.*

## ஓர் பிரமசாரியின் மனோராஜ்ஜியங்கள்.

(FROM IK MARVEL'S "REVERIES OF A BACHELOR.")

### III. சாம்பல்—என்றால் துக்கம்.

*Symbology: Objective:* Ashes. *Subjective:* Sorrow and Tribulation.

காதலிற்கனிதல்-ஸ்தூலசூக்ஷ்மசிக்ஷம்-Saving power of Love.

"ஒழித்துவிட்டுப்போம்போது அழைத்தையே ஆர்வ [முடன்
கழித்துவிடப்போகிறேன் காயமதையிப்போகாண்
அழித்துடல்நா னெவ்வுலகமெங்கெங்கே போயிடி [னும்
ஒழித்துவிடேனுன்சிந்தை யுன்னன்பை மறவே [னென்றாய்."

காதலிற்கரைதல்-ஸப்தலோகமுந்தாண்டல்-Its transcending the seven mental states.

"உன்னன்பைமறவேனென்றா யுலகேழுந்தாண்டி [னும்
என்னன்பையறிந்தவுனக்கேதுநானியற்றிடுவேன்
என்னன்ப, என்கண்ணே, கண்மணியே, ஆருயி [ரே!
பொன்னகம்போமென்றனுக்குப் போகவாமீவை [யென்றாய்.',

காதலிற்போதம்-ஆர்வநிறைவு-Fulfilment of Love.

"போகவரமீயென்றாய் பொற்பாதம்சேர்வேனென்றாய்
யோகசமாதியிலும் போதரிலையனுபோகமதிலும்
ஏகமாயுயிர்நிலையறிந்துள்ளமுடையுமட்டும்
ஏகமாயெனையறிந்துன்னகத்திருத்துவையிவ்வரமீவையென்றாய்."— ஆத்மவித்யா
[மஞ்சரியில் "காதற்செல்வி."

மேலும் யோசித்தேன்.—

மனிதனுடைய வாழ்வுமிப்படித்தான். உலகமுழுவதுமே யிப்படித்தான். அவியும் ஜ்வாலைக்குப் பின் அவியாச் சாம்பலென்பதுபோலவே நிலையற்ற வாழ்வின் பின் நிலையான சாவும், சிற்றின்பத்துக்குப்பின் பெருந்துன்பமும், அறியாக்குழந்தையின் சிரிப்புக்குப் பின் அறிவுற்ற மாந்தரின் அழுகையுமாக மாறி மாறி வந்துகொண்டேயிருக்கும். பிரபஞ்சமென்பதே என்ன? நிர்மலமாய் நிச்சலமாய் நிச்சப்தமாயிராநின்ற பாற்கடலில் ஒரு குன்றுமணி விழுவதாலுண்டாகும் ஓர் நுட்ப அலையும், அப்பாற்கடலிற் பள்ளிகொண்டவனது யோக நித்திரையைச் சிறிதும் கலைக்கவுமாட்டாத ஒரு முணுக்கென்னும் சப்தமுமேயொழிய வேறொன்றுமில்லை!

உடனே "பாட்சா, பாட்சா, இங்கேவா, பையா" என்று நாயை எழுப்பித் தட்டிக் கொடுத்தேன்.

ஒரு மனிதனுக்கு நாயைக்கட்டி முத்தமிடுவதிலுள்ள சுகம் அற்பமே. ஆனால் அதையிழந்துவிடுவதில் மனதுக்கு ஆறாத்துயரென்பதில்லை. இன்னொரு நாயைப் பிடித்து வளர்த்து வந்தால் எல்லாம் சரியாகிவிடும். தனியே காலந்தள்ளும் நமக்கு ஒரு பொழுது போக்குத் துணையாக நாயை வளர்ப்பதேயொழிய வேறில்லை.

ஆனால் நம்மனது, நாய் வளர்த்தல், சீட்டாடுதல், சங்கீதம் கேட்டல், வேதாந்தம் படித்தல் இவற்றோடு நில்லாமலும், வருஷந்தோறும் மனதிலுதிக்கும் ஆசைகளையும் எண்ணங்களையும் இன்னொரு தைமாதம் பிறக்கட்டுமென்று தடுக்காமலும், மற்றொரு மனதைத்தேடி யடைந்து அதனிடத்துப்பூர்ணமாய் அன்பு செலுத்தி அதனோடுயிர்ப் பிணையாய்க் கலந்து வாழுமாகில்—அப்பொழுது அவ்வுறவை யிழப்பதென்றால் அது அவ்வளவிலேசான காரியமா? மனந்தாளுமா? பொழுதுபோக்குவதற்கு இன்னொரு நாயைப்பிடித்து வளர்ப்போமென்று சொல்ல முடியுமா?

எப்படி என்மனது புகையும்போது சந்தேகத்தையும் அனலடிக்கும்போது சந்தோஷத்தையும் பிரதிபலித்ததோ அப்படியே நீறு பூத்துச் சாம்பலாய்க்கொண்டிருக்கும் தணல்களை நோக்கி துக்கமடைந்தது.

கலியாணமாகி இரண்டொரு வருஷம் வரையில் எத்தனை சிநேகிதர்களிடமிருந்து நம்மைச் சந்தோஷங்கொண்டாடி வாழ்த்துங் கடிதங்கள் வந்தன. ஒருவன் எழுதுகிறான்: "உன் மனதைக் கவர்ந்தவள் மிக்க அழகு வாய்ந்தவளாயிருக்கவேண்டுமென்று எண்ணுகிறேன்."

அதற்கு சந்தேகமென்ன? மாசிநிலாப்போலினிய முகத்தவள். மற்றொருவன் "பணக்கார இடந்தானா" என்று கேட்கிறான்.

அடே மடையா! ஸ்திரீ புருஷர் பிரியந் தவறாமல் மனதொத்து வாழ்ந்தால் அதைக் காட்டிலும் ஐசுவரியம் வேறுண்டா?

இன்னொருவன் "படித்தவள் தானா" என்கிறான்.

படித்தவள் தான்—ஆயினும் குழந்தை போற் குற்றமறியா நெஞ்சத்தவள்.

இப்பொழுது அக்கடிதங்களை எடுத்துப் பார்க்கும்போது இவ்வளவருமையான உயிருக்கு எங்கு மோசம் வந்துவிடுமோ என்று நெஞ்சம் நடுங்குகிறது.

அவளுடைய நடை தளராமலிருக்கிறதா என்று என்ன ஆவலுடன் கவனிக்கிறோம். அவளது கன்னங்களிலிரத்தஓட்டம் குறையாமலிருக்கிறதா என்று எவ்வளவு கவலையுடன் உற்றுப்பார்க்கிறோம். அவளுடையகண்களின் பிரகாசம் கொஞ்சம் மங்கியிருப்பதாகத் தோற்றினால் என்ன நடுக்க முறுகிறோம். படிக்கட்டுகளேறி மாடிக்குப் போகும்போது அவள் மேல்மூச்சு வாங்காமலிருக்கிறாளா என்று என்ன பயத்தோடு அவளது மூக்குக்கு நேராகக் கையைவைத்துப்பார்க்கிறோம்.

தன் தேகஸ்திதியைப்பற்றித் தான் வெகுநாளாய் மனதிற்குள் பயந்திருந்ததை வாய் விட்டு ஒருநாள் நம் காதலிரகசியமாய்ச்சொல்லிப் பின்பு அதேமூச்சில் தென்னல்போற் குளிர்ந்து அம்புபோற்கூறிய சொற்களோடு "எல்லாம் அவனது திருவுளப்படி நடக்கும். அவன் கிருபையிருக்க நாமொன்றுக்கும் பயப்படவேண்டியதில்லை" என்று தைரிய

மும் சொன்ன பிறகு நமக்கு இராத்தூக்கம் சரியாய் வருமா?

சன்னல் வழியாய் சீறிக்கொண்டு ஒரு காற்று அடிக்கவே மேற்படிந்திருந்த நீறு நீங்கித் தணல்கள் தகதகவென்று பிரகாசித்தன.

ஒருக்கால் கடவுள் கிருபையால் அவள் வியாதிநீங்கி சௌக்கியமாய்விடலாம். ஆனால் எல்லாநோயிலுங் கொடிதான தாரித்திரியமெனும் நோயிகைப்பட்டு வருந்தினலோ?—தனியாயிருந்தால் நம்நாய் எலும்பைக்கடித்துக்கொண்டும் நாம் மனப்பால் குடித்துக்கொண்டும், பொழுதுவிடிந்தால் ஏக்கத்தோடு எழுந்திருக்கிறதும், பொழுதுபோனல் சந்தோஷத்தோடு உறங்குகிறதுமாகக் காலந்தள்ளிவிடலாம். தனியாயிருப்பவனுக்கு வேதாந்தம் வெகு சீக்கிரம் வரும். கையிலோ பணமில்லை. மூளையில்மட்டும் கடவுள் கொடுத்த அறிவு இருக்கிறது. எவ்வளவுக்கெவ்வளவு சட்டைப்பையில் கைவிட்டெடுக்க ஒன்றுமில்லையோ அவ்வளவுக்கவ்வளவு மூளையிலிருந்து மனோதர்ம சத்தியால் மனோராஜ்யங்களை சிருஷ்டிப்பான். தான் அனுபவித்த சுகங்களை நினைப்பதனலேயே அவைகளை இன்னொருதரம் அனுபவித்து விடுவன். தானடைந்த அரிய அனுபவங்களைச் சிந்தித்து அச்சிந்தனையிலேயே ஆழ்ந்துவிடுவன். அவனுக்கு ஒரு குடிசையிருந்தால் அக்குடிசையில் ஸரஸ்வதியும் கூடக் குடிவந்துவிடுவள். அவன் மழையிலும் குளிரிலுமடிபட நேர்ந்தாலும் அது அவனுக்கு இலக்ஷியமில்லை. “நாம் மட்டுந்தானே யடிபடுகிறோம். இது நமக்கு ஸகஜந்தான்.—நம்முடன்கூடப் பிறர் யாரும் நம்மால் கஷ்டப்படவில்லையே” என்று தன்னைத்தானே தேற்றிக்கொள்வான். அவனது நாயும் அவனிடத்தில் பயப்படாமல் அவனுக்குச்சமான தோழனகவே கூடப்படுத்துறங்கும். தனக்குக் கிடைக்கும் அரைவயிற்றுச்சோற்றில் அதற்குக் கால்வயிறுபோட்டு மிகுதியைத் தான் சாப்பிட்டு அதனோடு சிரித்து விளையாடுவான். கம்பர், புகழேந்தி, பில்கணர் இவர்களை நினைந்து தானும் பிச்சை புகுவான். விடுவாசல் பெண்டுபிள்ளைகளையெல்லாம் துறந்த பட்டணத்தாரை நினைந்து வைரக்கல்போன்ற நட்சத்திரங்களிழைத்த ஆகாயப் பந்தரின்கீழ்த் தானும் படுத்துறங்குவான். பொழுதுபோகாவிட்டால் நீதி சதகத்திலிருந்தும் மேகஸந்தேசத்திலிருந்தும் சுலோகங்களும், கம்பர், தாயுமானவரிலிருந்து பாட்டுக்களும் பாடிக்கொண்டிருப்பான்.

உலகம் தன்னைக் கவனியாமல் தனியே விலக்கி விட்டமையால் தானும் உலகத்தைக் கவனியாமல் அதைத் தன் மனதிலிருந்து விலக்கி விடுகிறன். தானொருவனே உலகத்திலொன்றிற்கும் பயப்படாதவனென்று பெருமையடைந்து சிரிப்பான். “கிழக்கோமுட்டிகளே உங்கள் பணத்தை நீங்களே பத்திரமாய் வைத்துப் பூசை செய்யுங்கள். யௌவனத்திலிருக்கும் அரசர்களே உங்கள் அரண்மனைகளிலும் உத்யானங்களிலும் நீங்களே விழுந்து புரளுங்கள். ‘நிஸ்வ ஹஸ்ய தணஜது’—ஆசையற்றவனுக்கு அண்டகோடிகளெல்லாம் துரும்புக்கு சமானம் என்றபடி நானே இவ்வுலகைமுழுவதையும் ஏகபோகமாய் அனுபவிக்கிறேன். நீங்களெல்லாம் அனுபவிக்கிற வழிதெரியாமற்றடுமாறுகிறீர்கள்” என்றும்,

> “வேண்டேன் புகழ், வேண்டேன் செல்வம், [வேண்டேன் மண்ணும் விண்ணும்
> வேண்டேன் பிறப்பிறப்புச், சிவம்வேண்டார் [தமை நாளும்
> தீண்டேன், சென்றுசேர்ந்தேன், மன்னுதிரு [ப் பெருந்துறை இறைதாள்
> பூண்டேன், புறம்போகேன், இனிப்புறம்போ [கல் ஒட்டேனே.!”

என்றும் வேதாந்தம் பேசுவான்.

ஆனல் தனித்திராமல் நம்முடன் இன்னொருயிர் வருந்துவதைக் கண்ணாரக்கண்டு நாம் உதவிபுரிய மாட்டாமல் நின்றாலோ? உலகத்தில் வேறெங்கும் புகலிடமில்லாமல் நம்மன்பையுமாதரவையும் தேடி அடைக்கலம் புகும்படியான தௌர்ப்பாக்கியம் பெற்ற ஒருவன் தகப்பன் வீட்டில் செல்வத்திற் பிறந்து வளர்ந்து இன்றைக்கு உடுக்கத்துணியும் உண்ணச்சோறுமில்லாமற்றவிப்பதைக் கண்ணல் கண்டும் நாம் உதவி செய்யமாட்டாமலிருப்பதைக்காட்டிலும் நம் ஹிருதயத்தைப்பிளக்க வேறு பாணம்வேண்டுமா? மனதைப் புண்படுத்த வேறு கவலைவேண்டுமா? ஆகாசத்தில் எவ்வளவு வெளிச்சமிருந்தாலும் நம்மனதுக்கு வேறு இருள்வேண்டுமா?

அவள் தான் கஷ்டப்படுவதாகக் காட்டிக்கொள்ளாமலும் தன் துக்கங்களை வாய்விட்டுச் சொல்லிக்கொள்ளாமலுமிருந்தால் இன்னும் கொடிதே. அவள் தன் மனோபலத்தால் கண்ணீருதிராமலும் வாய்திறவாமலும் பொறுத்து வந்தால் அது நம்மனதுக்கு தைரியமாகுமா? நாம் கஷ்டப்பட்டு அவளுக்காகத் திருடிக்கொண்டுவந்த சோற்றைப் பசியால் வருந்தி மெலிந்திருக்கும் குழந்தைகளுக்கு அவள் பங்கிட்டு நிற்பதைப்பார்க்க நம்மனம் தாளுமா?

ஆனால் கடவுள் கிருபையும், வஞ்சனையில்லாமல் உழைக்க தேகபலமுமிருக்குமானால் இவ்வாபத்துக்கள் நீங்கி விடலாம். கடவுள் நமக்கு ஏராளமாகவே தனதானியங்கள் கொடுத்திருப்பதாக வைத்துக்கொள்வோம். ஆனால் நம்மருமைக் குழந்தை ஞானம்பாள் மட்டும் வரவர உடம்பிளைத்து வருகிறாள்.

அடா தெய்வமே! என்ன பணமிருந்துதானென்ன? வெளுத்திருக்கும் அக்கன்னங்களிலிரத்தத்தையும் பஞ்சடைந்த அக்கண்களில் பிரகாசத்தையும் பணம் திருப்பிக்கொடுக்குமா? மெலிந்த உடல் மெலிந்துக்கொண்டே வருகிறது. குரலும் வரவர ஹீனஸ்வரப்பட்டு வருகிறது.

"ஞானா" என்று கூப்பிடும்போதே நம் குரல் நடுங்குகிறது, அவள் யமன் வாயிலகப்பட்டுவிடுவள என்று நன்றாய்த் தெரிகிறது. நாம் அவளி த்துச் செலுத்தும் அன்பெல்லாம் அவளை மீட்டுவர முடியுமா? உத்தியோகத்துக்காக தினம் குழந்தையைவிட்டு வெளியேபோகவேண்டி யிருக்கிறது. ஆனால் தினம் சீக்கிரம் வேலைகளை முடித்துக்கொண்டு குழந்தையோடு ஒருவார்த்தை பேசுவோமென்று அவசரமாய்த் திரும்புகிறோம். கடைசியில் ஒரு நாள் நாம் எவ்வளவு சீக்கிரம் வந்தும் பிரயோசனமில்லாமற்போகிறது. நாம் வருமுன்னமே குழந்தை கண்மூடிவிடுகிறாள். இனி அழுதாலவள்காதிலேறுமா? கூப்பிட்டாற்றிரும்பிப்பார்ப்பாளா? கையில்கொடுக்கும் பூச்செண்டை வாங்குவாளா? எல்லாம் ஒருபிடி சாம்பலாய்ப்போகிறது.

இப்படி யோசிக்கையில் காற்று வலுத்து சீறிக்கொண்டு ஜன்னல் கதவுகளைப் படபடக்கச் செய்து கொண்டிருந்தது. கண்களை மறைத்து நின்ற ஒரு நீர்த்துளியைத் துடைத்துக்கொண்டு "கடவுள் நமக்கின்னும் இவ்வளவு துக்கங்களைக்கொண்டு வந்து விடவில்லையே" என்று சந்தோஷித்தேன்.

ஆனால் ஒரு வருஷமானால் எல்லா துக்கங்களும் தானே மறந்துபோகின்றன. போனால் போகட்டும் நம் மனைவியின் முகமாவது உதடுகளாவது இன்னும் வாடவில்லை. இன்னும் 18 வயதுக் கட்டழகியாகவே யிருக்கிறாள்.

மேலும் அவள் கையில் இன்னொரு ஆண் குழந்தை வைத்திருக்கிறாள். நமது எண்ணங்களும் அபிமானங்களும் அக்குழந்தையினிடத்திலேயே சுற்றிக்கொண்டிருக்கின்றன. அவன் நாளொருமேனியாய் வளர்பிறைச் சந்திரன்போல் அழகில் விர்த்தியாகி வருவதை எவ்வளவு ஆவலுடன் நாம் கவனிக்கிறோம். இப்பொழுது வரவர நம்மன முழுவதும் கவர்ந்து விட்டான். முதல் முதல் அவன் "அப்பா, அம்மா" என்று மதலைச் சொல்லுடன் பேச ஆரம்பித்தபோது நம்மையறியாது அவனிடத்துண்டான வாஞ்சை, இப்பொழுது அவன் "அப்பா அந்த பூவுக்குப் பேரென்ன? இந்த செடிக்குப் பேரென்ன?" என்று நம்மை இடைவிடாது வினவிப் புதிய விஷயங்களைத் தெரிந்துகொள்வதில் அவனுக்குள்ள ஆவலையும், பரபரப்புடன் சலித்துப் பிரகாசிக்கும் அவனது கண்களில் விளங்கும் புத்தி நுட்பத்தையும் நாமறிந்த பிறகு, அவ்வாஞ்சை இன்னும் இரண்டு மடங்கு அதிகரித்து விட்டது. இரண்டு வருஷத்துக்கு முன் வசூரியிலகப்பட்டுப் பிழைத்தது புனர்ஜன்மமென்று அரிதாய்த் தப்பித்த குழந்தையாதலின் முன்னிலும் பதின்மடங்கு நமக்கு அருமையாகி விட்டான். மேலும் இப்பொழுது அவனுக்கு மூத்ததான பெண் குழந்தையும் இறந்துபோக விட்டு, அவன் ஏக புத்திரனாகி விட்டபடியால், அவனது தமக்கையினிடத்தில் நாம் செலுத்தியிருந்த அன்பெல்லாம் இவனிடம் பெயர்ந்து வந்து விட்டன.

"அப்பா, மேல்காற்றிலலையாதே! உள்ளேபோ!" என்கிறோம். இரவில் அவன் தூங்கும்போது படுக்கையருகிற்போய் அவனது கையைப்பிடித்து "தாது" சரியாயிருக்

கிறதா என்றும் மூக்கிற்கு நேராய்க் காதை வைத்து சுவாசம் நிதானமாயிருக்கிறதாவென்றும் மார்பில் கையை வைத்து ஹிருதயத்திலிரத்தம் சரியாய் ஓடுகிறதாவென்றும் மெல்ல அவனை எழுப்பாமல் பார்க்கிறோம்.

திடீரென்று ஒருநாள் "அடடா இதென்ன இன்றைக்கு மூச்சு ஒன்றும் தெரியவில்லை. அடியே விளக்கைக் கொண்டுவா! அவன் மூக்கின் சமீபத்தில் காதை வைத்துப்பார்! சுவாசத்தைக் காணோமே! இதென்ன நம் கைதான் ஏதாவது வியர்வையினால் ஈரமாயிருக்கிதா அல்லது அவனது கைதான் ஜில்லிட்டுப் போயிருக்கிறதா? கையை நன்றாய்த் துடைத்துத் தேய்த்துவிட்டுப்பார். ஐயையோ! நீயும் போய்விட்டாயா என்னப்பா! இனி என்னைப்பார்த்து ஒரு வார்த்தை பேசாயோ குழந்தாய்!" என்றழுகிறோம். கண்ணீரினால் அவன் உடம்பு நனைந்துபோமே என்கிற பயம் இனி இல்லை! அவனை மெல்லத் தூக்கிப்பார்க்கிறோம்! இனி மெல்லத்தூக்கினாலென்ன, முரட்டுத் தனமாய்த் தூக்கினாலென்ன? எல்லாம் ஒன்றுதான். இனி அவனுக்கு வலிக்கப்போகிறதா?

ஆம், கண்ணீர் ஆராய்ப் பெருகுகிறது—இக்கண்ணீர் மட்டுமில்லாவிட்டால் மனிதன் பிழைப்பதெப்படி! வயிறு வெடித்து சாகவேண்டியது தான். அழுதானோ பிழைத்தானோ! உலகத்தில் கண்ணீரைக்காட்டிலும் அருமையான வஸ்து வேறில்லை. மனிதனையே 'கண்ணீர் பெருக்கும் ஜந்து' என்று சொல்லலாம். கண்ணீரில்லாவிட்டால் மனிதனுக்கும் மிருகத்துக்கும் பேதமென்ன? அன்பினுருவே கண்ணீர்—அவ்வன்பே கடவுள். கண்ணீரென்றால் நாலுபேருக்குப் பகட்டாய்க் கூலிக்கு ஒப்பாரி வைத்தழும் * பெண்டிரைப்போலவாவது, ஆனந்த பாஷ்பத்துக் கரைப்படி மிளகு செலவழித்த செட்டியாரைப்போலவாவது "சோற்றுக்கு வைக்காமல் தலைமயிரைமட்டும் கொண்டுபோய் விட்டீரே" என்று புருஷனைக் குறித்தழும நூதன விதந்துவைப்போலவாவது வரவழைத்துக் கொள்வதல்ல. எவனொருவன் நாலு கதவையும் சாத்திவிட்டு ஏகாந்தமான விடத்தில் இவ்வுலகில் மனிதனது அற்பவாழ்வையும் கடவுளது சொல்லிறந்த மகிமையையும் அதை யறிந்து உய்யும் வழி தேடாமாந்தரையும் நினைந்து "நெஞ்சந்துடித்தகன்பாற் கரைந்து இருகணீரருவி சொரியத் தேம்பி" நிச்சப்தமாய்த் தன்னை மறந்து கண்ணீர் பெருக்குகிறானோ அவனே உத்தமன். எக்குடிப் பிறப்பினும் அவனே உயர்குடியிற் பிறந்தோனாவன்.

ஆனால் மனிதனுக்கு தைரியமும், பொறுமையும், இன்றைக்கில்லாவிட்டாலும் நாளைக்கு நமக்கொரு நல்ல காலம் பிறக்கும் எனும் நம்பிக்கையும் தானே நாளடைவில் வந்துவிடுகின்றன. இச்சாம்பல்களில் இனி நெருப்புண்டானாலும் உண்டாகலாம், மனிதனுக்கு மட்டும் இந்த இயற்கையான நம்பிக்கை இலகுவில் போகாது. ஆனால் மற்ற விஷயங்களிற்போலவே, தைரியம், பொறுமை, நம்பிக்கை இவைகளுக்குமோரளவுண்டு. அவ்வளவுக்கு மிஞ்சிக்கடவுளால் சோதனை செய்யப்படாதவனே புண்ணியவான்.

தனிக்காட்டுராஜாவாயிருப்பவனுக்கு ஒன்றும் பாதகமில்லை. அவனைத் துக்கங்கள் பற்றி யிழுக்க முயல்வது மொட்டைத்தலையனைச் சிண்டைப்பிடித்திழுக்க முயல்வது போலத்தான்.

சினேகிதன் இறந்து விட்டால் "ஐயோ பாவம்!" என்று பெருமூச்சு விட்டு நாயைத் தட்டிக் கொடுக்கிறான். ஸ்மசானத்தைக் கண்டால் "நமக்குமிவ்வழியே" என்று வேதாந்தம் பேசுகிறான். திரவிய நஷ்டமானால் "இனி செட்டாய் செலவழிப்போம். நம்மொருவனுக் கிவ்வளவு போதாதா" என்று திருப்தியடைந்து தூங்குகிறான். யாராவது அவனைத் திட்டி அவமரியாதை செய்தால் "சே! பயித்தியங்களா உங்கள் அவமரியாதைக்கு நான் பயந்தேனா?" என்று சிரிக்கிறான். வியாதி வந்தால் "இது என்றைக்கும் போகவேண்டிய கட்டை, முன்னே போனாலென்ன பின்னே போனாலென்ன" என்றுவிரக்தியடைகிறான்.

ஆனால் பிள்ளைகளைப் பறிகொடுத்து விட்டுப் பெற்ற வயிறெரிந்துகொண்டிருக்கும் பேதை மனைவி யொருவள் நம்மையே கதி

* I learn there are such women at Madras.

யாக ஆண்டிக்கொண்டிருந்தாலோ? அப்பொழுது கிதையிலிருந்து சுலோகங்களை உளறிக்கொட்டவாயெழுமோ? கம்பராமாயணத்தை எடுத்து, மேற்படிந்திருக்கும் தூசியை மெல்லென ஊதிவிட்டுப் பிரித்துப் படிக்கக் கை வருமோ? மணிப்பிரவாள சுலோகங்கள் கவனம் செய்ய புத்தி ஓடுமோ? நாயைக் கூப்பிட்டு அது துள்ளி எழும்புவதைப் பார்த்து "பலே பாட்சா" என்று தட்டிக்கொடுக்க முடியுமோ? எரிகிற புண்ணில் எண்ணெயைத் காய்ச்சி ஊற்றுவதுபோல் யாராவது நம்மை அவமதித்தால் சிரிப்பும் தூக்கமும் வருமோ? அளவுக்கு மிஞ்சிக் கடவுளால் சோதனை செய்யப்படாதவனே புண்ணியசாலி யென்று மறுபடியும் நினைந்தேன். கடைசியில் எல்லாவற்றுக்கும் மேலான சோதனையும் வந்து விடுகிறது. (தணலெல்லாம் அநேகமாய் அவிந்து சாம்பலாய் ஜில்லிட்டுப் போய்விட்டது.)

குழந்தைக்குக் குழந்தையாய் தாய்க்குத் தாயாய் தோழிக்குத் தோழியாய் இல்லிற்கில்லாளாய் இருந்து நம்மன்பை யெல்லாம் கொள்ளை கொண்ட அவளும் வரவர வாடிக்கொண்டு வருகிறாள். அழகில் வாடவில்லை; அப்படி வாடினாலும் இவ்வளவு நாள் பழகவிட்டு அது ஒரு பெரிதாய்த் தோற்றாது. உடல் மெலிந்து வருகிறாள்.

அவள் தேகஸ்திதியைப்பற்றி நாம் கவலைப் படுகிறோமென்று ஒரு பார்வையிலறிந்துகொண்டு உடம்பில் அசக்தியில்லாததுபோல் தைரியமாய் நம்மெதிரில் நடக்க முயலுகிறாள். நாமிருவருமாகச் சேர்ந்து பட்ட கஷ்டங்களும துக்கங்களுமாகச் சேர்ந்து நம்மிருவருக்கும் உள்ள அன்பெனும் பாசத்தை வெகு வலுவாய் இறுக்கிவிட்டது. சகவாச தோஷத்தினால் மனதும் ஒத்துப் போய்விட்டது. நாம் தனித்திருந்த காலத்தில் எல்லோரிடத்தும் சமமாய்ப் பொதுவாய் வைத்திருந்த நேசமெல்லாம் இப்பொழுது ஒரிடத்தில் வேரூன்றித் தழைத்துப் பலன் கொடுக்க ஆரம்பித்தது மன்றி * 'முன்னிலும் அதி சூட்சுமமும் கூர்மையுமான உணர்வை யுடையதாகிவிட்டது.' இனிப்பெயர்த்து வேறிடத்தில் வைத்தால் வளராது. இதற்கு முன் கண்டவிடத்திற் தெருவிற்றிரியும் பிள்ளைபோல் கேட்பாரற்று நின்று வளர்ந்துவந்த நம் ஹிருதயம் இப்பொழுது செல்லப்பிள்ளையாகி, காற்றடிக்கப்படாது, வெயில்படக்கூடாது, என்று பத்தியம் சாப்பிட்டு வரும் நோயாளியைப் போலாகிவிட்டது.

முன்போல் தெருவிற் போகிறவர்களை யெல்லாம் கண்டு கவலையற்று சாவகாசமாய் நின்று க்ஷேமம் விசாரிக்க இப்பொழுது வாயெழுகிறதில்லை. கச்சேரியை விட்டுப் புறப்பட்டால் வீடு சேருகிற வரையில் குனிந்த தலை நிமிராமலும் திரும்பிப் பாராமலும் வழியில் நிற்க வொட்டாமலும் ஓர் வசீகர சக்தி நம்மை இழுத்துக்கொண்டு போகிறது.

அப்பேர்ப்பட்ட சக்தியும் இப்பொழுது மங்கிப்போக ஆரம்பித்துவிட்டது. மனதுக்கு எவ்வளவு கவலை! "இனி பயமில்லை, எல்லாம் சௌக்கியமாய் விடும்" என்று தைரியமாயிருக்கப் பார்க்கிறோம். அவளும் நம்மனதிற்கு பயத்தைக் கொடுக்கக் கூடிய விஷயங்களைக் காண்பிக்காமல் மறைக்கப் பார்க்கிறாள்.

இப்பொழுதுதெருவிலோடும்வண்டிகளின் சப்தமும் வேலையற்றவர்கள் சிரிக்கும் இரைச்சலும் நம் காதில் நாராசம்போல் விழுகிறது. நாம் தனியாயிருக்கும்போது இந்த இரைச்சல்களெல்லாம் தேவகானம்போலிருந்தன.

இப்பொழுது நாம் இவ்வளவு கவலைப் பட்டுக்கொண்டிருக்க நம்மைக் கொஞ்சங்கூட கவனியாமல் பூமியும் பூமியிலுள்ளவர்களும் சூரிய சந்திர நக்ஷத்திராதிகளும் தத்தம் வேலையை மட்டும் கவனித்துக்கொண்டு போகிறார்களென்று நமக்கு சொல்லவுமாட்டாமல் மெல்லவு மாட்டாமல் வயிறெரிகிறது. நாம் தெருவிற் போகும்போது நம்மைக் கண்டு பலர் "நமஸ்காரம்" என்றுகையைத் தூக்குகிறார்கள். நாம் அவர்களுக்குப் பதில் சொல்லக்கூட சாவகாச மில்லாமல் ஓடுகிறோம்.

* (Our affections have caught a finer tone and touch.)

"என்ன! அய்யர் முன்னெல்லாம் போலில்லை, ஒரு மாதிரியா யிருக்கிறார்" என்று ஒருவருக்கொருவர் நம் பின்னால் பேசிக்கொள்வதெல்லாம் நம் காதில் விழுகிறது.

நமதம்பட்டன் தனக்குச் சேரவேண்டிய க்ஷவரக்கூலிக்காக நம் வீட்டுக்கு வருகிறான். வந்து ஒருகும்பிடு போட்டுவிட்டு ஒன்றும் பேசாமல் ஒதுங்கித் தலைகுனிந்து மௌனமா யிருக்கிறான். நாம் துக்கத்தினால் வருந்துகிறோமென்பதையறிந்து அவனவ்வளவு மரியாதையா யிருக்கிறான். "ஆகா! தெருவிலிரைச்சலிட்டுச் சிரித்துக்கொண்டு திரியும் சோம்பேரிகளெல்லாம் அம்பட்டர்களா யிருந்தாலாகாதா" என்று தோற்றுகிறது. வைத்தியன் அவளுக்குக்கைபார்த்து மருந்து கொடுத்துவிட்டு வீட்டுக்குப்போகிறான். நம்கண்கள் அவனைத் தொடர்ந்து கொண்டே செல்லுகின்றன. "இவன் கெட்டிக்காரன்தானா? நிதானிதானா? தவறிப்போய் ஒன்றுக்குப் பதிலாக இன்னொரு மருந்தைக் கொடுத்துப் பிசகுசெய்யாம லிருப்பானா? பணத்தாசைக்காக வைத்தியம்செய்யாமல் ஈசுவரபக்தி ஜீவகாருண்யமுள்ளவனா?" என்று பலவாறு யோசிக்கிறோம்.

நடுவில் ஏதாவதொருநாளைக்கு அவளுடம்பு சௌக்கியமாகிவிடும்போல் தோற்றுகிறது. கொஞ்சம் பசித்து சாப்பிடுகிறாள், எழுந்துமெல்லநடக்கிறாள். சிரித்துக்கொண்டுபேசுகிறாள். ஆனால்மறுநாள் இவ்வளவுக்கவ்வளவு ஒரேபடுக்கையாய்ப் படுத்துவிடுகிறாள். பேசவும்சக்தியில்லை. கைசாடைதான் காண்பிக்கிறாள்.

இப்பொழுது கச்சேரியிலிருந்து வெகுசீக்கிரம்வந்துவிடுகிறோம். "விளக்குவைக்கிறமட்டும் உழைத்து யாரைக் காப்பாற்றவேண்டும்? உத்தியோகம் உயர்ந்து நமக்காகவேண்டியதென்ன? பணத்தை சம்பாதித்து யார்தலையில் கொட்டுகிறது?" என்றெண்ணுகிறோம். வீட்டில்அவள் திண்டுதலையணைபோட்டு சாய்ந்துகொண்டு பெருமூச்சு விடுகிறாள். இறந்துபோனபையன் படித்து அவனது கைவியர்வையினால் அழுக்கடைந்து கிழிந்துகிடக்கும் இரண்டாம்பாட புஸ்தகத்தைக் கையில்வைத்துப் புரட்டிப்பார்த்துக் கொண்டிருக்கிறாள். நம்மைக்கண்டவுடன் நம்துக்கத்தைக் கிளப்பக்கூடாதென்று அப்புஸ்தகத்தைத் தலையணையின்கீழ்ச் சொருகிவிடுகிறாள். "கொஞ்சம் தேகத்தில் சக்தியுண்டானால் தோட்டத்துக்குப்போய்ச் சற்று உலாவிவருவோம்" என்கிறாள். அங்கேபாடும் பக்ஷிகளையும்வீசும் மந்தமாருதத்தையும்கண்டால் பழையநாளைய ஞாபகங்கள் வருகின்றன. "இவ்வளவுநாள் நாமிருவரும் சேர்ந்திருக்கப் பாக்கியம் பெற்றோமே" என்று கண்ணீர்ததும்பக் கடவுளுக்கு வந்தனமளிக்கிறாள்.

திடீரென்று ஒருநாள்பகல் 2-மணிக்கு நாம் கச்சேரியிலிருக்கும்போது சேவகன் வந்து நம்மை யவசரமாய் வீட்டுக்குக்கூப்பிடுகிறான். ஓட்டமாய்ஓடி வீடுசேருகிறோம். அங்கே அவளுக்குக் கண்மூடி இருக்கிறது. சிரமப்பட்டு மேல்மூச்சுவாங்குகிறது. நாம்அவள் கையைத் தொட்டுப் பிடிக்கவும் அவள் கண்ணைத்திறந்து பார்க்கிறாள். நம்கை நடுங்குகிறது. அவளது கைமட்டும் நடுங்கவில்லை. நம் பேரைச் சொல்லி உதட்டை அசக்குகிறாள் "பயப்படாதே—தைரியமாயிரு—கடவுள்—உன்னைக்—கைவிட—மாட்டார்" என்று மெதுவாய் ஒவ்வொரு வார்த்தையாய்ச் சொல்லுகிறாள். மறுபடியும் கண் மூடிவிடுகிறது. அவள் கைப்பிடி வரவர சிறுகுகிறது. இன்னொரு பெருமூச்சு விடுகிறாள்—பிறகுஒருமூச்சு—அப்புறம் மூச்சில்லை—நம் கண்களில் கண்ணீரு

யில்லை—எல்லாம்வற்றிப்போய்விட்டது. வரவழைத்தாலும் வரமாட்டே னென்கிறது—பிறந்தமேனிக்கு நம்மைத் தனியாய் விட்டுவிட்டுப் போய்விட்டாள்!

நம்மனது ஏதோ பைத்தியம் பிடித்தாற்போலிருக்கிறது. ஒன்றும் தோற்றவில்லை வீட்டில் அழுவார் யாருமில்லை—வாத்தியார் வெகுசீக்கிரமாய்மந்திரங்களைச் சொல்லுகிறார். இன்னது செய்கிறோமென்று தெரியாமல் நாமும் கூடவேசொல்லுகிறோம். பிரேதத்தை ஸ்மசானத்துக்குக் கொண்டு போகிறார்கள். இத்தனைநாளாய் நம்முடன் பேசிசிரித்து அழுது விளையாடிவந்தஜீவன் இப்பொழு எங்கே என்று கேட்டால் யாரால் சொல்லமுடியும்? கடைசியாய் அக்கினியையும் போடுகிறோம் "அடி! கலியாணி! இதை வாங்கிக்கொண்டு போகத்தானா இத்தனைநாள் காத்திருந்தாய்!" அடுத்த வீட்டுக்காரர்களெல்லாம் உபசாரத்துக் கழுதுவிட்டு அவரவர் வீடுபோய்ச்சேருகிறார்கள். நாமெங்கேபோகிறது? நமக்கினி வீடு எது? வீட்டுக்காரி இல்லாத இடத்துக்கு வீடென்கிறபெயர் தகுமோ? எதைப்பார்த்தாலும் "வெறிச்"சென்றிருக்கிறது. ஊராரெல்லாம்உபயோகமற்றஉபசார அழுகைஅழுகிறார்களே! நமக்குமட்டுமேன் அழுகைவரவில்லை? இதென்னஆச்சரியம்! பெண்டாட்டி செத்தால் ஒருவனுக்கு அழுகைவராதோ? ஒருக்கால் நம்நெஞ்சுதான்கல்லோ? அன்றிரவு தூக்கமில்லை. நிலவு நன்றாய் வீசுகிறது. நிலவுபோலினிய அவளும் நிலவிற்றான் போய்க் கலந்துகொண்டாளோ? தொண்டைவரண்டு தாகமாயிருக்கிறது. "அடியே! கொஞ்சம் வெந்நீர்" என்றுதவறிப்போய் வாயில்வந்துவிடுகிறது. அவள்படுத்தபடுக்கை உடுத்தபுடவைகளையெல்லாம், அவைகளுள் ஒளிந்திருக்கிறாளென்று பார்ப்பதுபோல் திருட்டுத்தனமாய்ப் புரட்டிப்பார்க்கிறோம். எல்லாசன்னல்களையும் திறந்துவிடுகிறோம். இனிக்குளிர்காற்று யாருடம்புக்காகாது? கிருபாநிதியே! என்னை இப்படிபரிசோதிக்கலாமா? குருவியின்பேரிலா ராமபாணம்? ஆமாம்! அனலுக்குப்பிறகு எப்போதும் சாம்பலுண்டாகும் என்பதற்குச் சந்தேகமென்ன?

"விண்ணிலொளியே விழுமியதேனே
மண்ணின்மதிபோல் மனைச்சோர்விளக்காய்
எண்ணிலொளியா யிருதயத்தன்பாய்
கண்ணிற்பாவைபோல்கணவற்கிசைந்தபாவாய்
[போற்றி!"

என்று வாய்விட்டுச்சொல்லிவிட்டு அடுப்பில் சாம்பலைக் கிளறினேன், ஒரு நெருப்புப்பொறிகூட வில்லை—என துநாயும் நன்றாய் அயர்ந்து தூங்கிவிட்டது. குடியிருப்பவர்களுடைய கடியாரம் ஒருமணி அடித்தது, கண்ணைத்துடைத்தேன்—இரண்டொருசொட்டுஜலம் விழுந்தது. அது அங்கே எப்படிவந்ததோ எனக்குத் தெரியாது—உடனே ஒரு பெருமூச்சுவிட்டு "நல்லவேளையாய் நமக்கின்னும் இப்படிப்பட்ட துக்கங்கள் வந்துவிடவில்லையே" என்று சந்தோஷித்தேன். "இனி வரும்படியாகவும் வைத்துக்கொள்ளுகிறதில்லை" என்று தீர்மானித்துக்கடவுளைத் தியானித்துப் படுத்து அயர்ந்து நித்திரைபோனேன்; அந்த அவஸ்தையில் "சிதக்நிகுண்டஸம்பூதை" யான அருட்தாய் வந்து "நான் வெளியாயிருக்கிறேன் பார்" என்று "தொட்டுக்காட்டி"—"அப்பா, நீ மடியில் நெருப்புப்போலிரு" என்று ஆசிர்வதித்தாள். அஃதோடு என்மனோராஜ்ஜியமும் முற்றிற்று.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

ஓர் நித்தியபிரமசாரி.

அர்ப்பணம்-என்காதலிக்கு.

Dedication: To Logos—My Love.

"என் காதலியே கண்மணியே கார்முகிலே காமுகர்க் கரிகாருணியே
உன் காதலிலே யீடுபட்டுக் கடைத்தேறினனடிநானே
என் காதல் நிலையறிந்தே நீ காதலியாய் வந்தாண்டாய்
உன் காதலருள் அமுதுண்டேன் காதல்வெள்ளம் கரைகடந்தே."—காதற்செல்வி.

ஓம் தத்ஸத்:

## IN MEMORIUM.
### E. A. MINNING & L. C. INNES.

### இந்தியாவை நேசித்த இருவர் தேகவியோகம்.

ஒருமாசத்திற்குள் இந்தியாவை நேசித்த இருவர் தேகவியோக மானூர்கள். இருவரும் இந்தியாவிடத்தில் ஹிருதயபூர்வகமாய் அன்பு வைத்துழைத்து வந்தவர்கள். நாஷனல் இந்தியன் அஸ்ஸோஷியேஷன் காரியதரிசியாகிய மிஸ் இ. ஏ. மானிங்துரைசானி இத்தேசத்துப் பெண்பாலாரை முன்னுக்குக் கொண்டுவரவும் இந்தியர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் பரஸ்பரம் நேசமுண்டாகவும் வெகுபாடுபட்டுழைத்துவந்தார். இவர் இதுவிஷயத்தில் தம் உடல் பொருள் ஆவியையும் அர்ப்பணம்செய்து உண்மையாய் உழைத்துவந்தார். இந்தியாவுக்கு நன்மை செய்வதில் இவருக்கிருந்த ஆஸ்தை மிகவும் பெரிது. அதன்பொருட்டு நேரும் தேகசிரமம், பணவிரயம், காலவிரயம் எல்லாம் இவருக்கு புண்யார்த்தம்நேர்ந்த புனிதயஜ்ஞங்களாம். இத்தக்கலிகாலத்தில் யாரும் ஒருவனுயிருந்து உலகக்ஷேமார்த்தமான ஒருகாரியத்தைச் சாதிப்பது அசாத்தியம். ஏனெனில் இப்பொழுது ஸ்வாமி 'கற்கியவதார' யாயிருக்கிறார். "கற்கைநன்றே கற்கைநன்றே பிச்சைபுகினும் கற்கைநன்றே" என்றதின் உட்கருத்து என்னவெனில் எதுவும் அறிந்தனுபவித்தாலன்றி அறிவுமயமாகாது: ஆகையால் இகபரசாதகமான அறிவையடையக் கல்விப்பழக்கம் அத்யாவசியயென்றார். "களவும் கற்றுமற" என்று இன்னொரு பழமொழியுமுண்டு. "கற்கை" என்கிறபதத்தில் கல்வியைக் கற்பதுமட்டுமன்றிக் கற்றதைமறக்கும் வித்தையுமடங்கியிருப்பதாக லக்ஷியார்த்தம் செய்துகொள்ளவேண்டியது. கற்கக்கற்றவன் கற்றதை மறக்கக் கல்லானுகில் அவனுக்குக் கதியில்லை. அவனுடைய கல்வியெல்லாம் அவனுக்குப் பெரும் பெந்தமேயாகும். "கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்" என்று ஔவையார் சொல்லியுள்ளார். "நினைப்பும் மறப்பும்" மனோதர்மங்களாதலால் அவை யிரண்டையும் கற்றவனே மஹாவிர்த்தியடைவான். இதையே சங்கல்பவிகற்பமென்றும் சொல்வார். இந்த இரண்டுதொழிலையும் உள்ளபடியுணர்ந்து அறக்கற்றவனுரோ அவனே மனதின் பாசவலையாம் பந்தத்தை யறுத்தவனுவன். முக்தன் என்றும் யுக்தன் என்றும் யோகியென்றும் சொல்லத்தக்கவன் அவனே. 'நினைப்புமறப்பு' இரண்டையும் அறக்கற்று மனதைத் தன் வசப்படுத்தினவன் உழைப்பில் ஒய்வையும், ஒய்விலுழைப்பையும் கண்டு அனுபவிக்க வல்லவனுகிறான். அதாவது அவன் என்னசெய்தாலும் சாந்தத்தையும் ஸமாதானத்தையும் விட்டு நழுவுகிறதில்லை. இப்படி இகபரமிரண்டிற்கும் இன்றியமையாக் கல்வியறிவை நம்மவர்கள் மௌட்டியத்தால் நமது பெண்பாலர்க்கு உள்ளபடி யளிக்காது வஞ்சனைசெய்து வருவதால் வரும்துன்பத்தை யுள்ளபடி யுணர்ந்து அதை நீக்குமாறு கங்கணங்கட்டியுழைத்த புண்யாத்மாக்களில் மிஸ் மானிங் முதலாய் எண்ணத்தக்கவர். அவருடைய அன்பையும் ஆதரவையும் பற்றி அவர் இந்தியாவுக்கு விஜயமானகாலத்தில் விவேகசிந்தாமணியில் விளங்கக் கூறியிருப்பதால், பின்னுங் கூற நிமித்தமில்லை யென்று விட்டோம். இம்மாதரசின் மரணத்தை அனேகர் சமீபந்துவை யிழந்ததுபோலும் கருதி வருந்துவர். இந்தியாவோ தனக்குற்ற துணையாகவிருந்து தவியதோர் திவ்யமாதை யிழந்ததாக வருந்துவள்.

"கற்கியவதாரம்" என்றால் எல்லாரும் பகவான் காலோடும் கையோடும் எங்கேயோ அவதாரமாகி லீலைசெய்யப்போகிறார் என்று வானத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். கிறிஸ்தவர்களும் இப்படிதான் கிறிஸ்து இன்னமெங்கேயவதரிக்கப் போகிறாரென்று வீணே பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். உண்மையுணராதார் மஹத்துகள் வாக்கியங்களுக்குத் தப்பர்த்தஞ் செய்துகொண்டு தாம் கெடுவதுமன்றி பெரியோரையும் பழித்து மற்றவர்களையும் கெடுத்துவிடுகிறார்கள். கல்விமிகுந்த இக்கலிகாலத்தில் எங்கும் கொள்கைகளே பெரிதாய்க் கொண்டாடப்படுகின்றன. ருஷியாவும் ஜப்பானும் சண்டைசெய்துகொண்டால் ருஷியா ஜயித்ததா ஜப்பான் ஜயித்ததா என்பது உலகத்தார் விசாரமல்ல. மெய் வென்றதா பொய் வென்றதா? என்பதுதான் விசாரம். "மெய்யே வெல்லும் பொய்யல்ல" வென்பது ஒரு பெரியகொள்கை. "ஸத்யமேவஜயதி" என்னும் வாச்சியார்த்தத்துக்கு லக்ஷியார்த்தமெதுவோ அதுவே "கற்கியவதாரம்." இந்தவுண்மையை இக்காலத்தார் (This is an age for the triump of Principles) நலந்தருகொள்கைகள் ஜயந்தருகால மிதுவென்று சொல்வர். ஆகையால் யார் யார் உண்மைக் கொள்கைகளை யுள்ளத்திலுணர்ந்திருத்தி அது பரவவேண்டுமென்று பாடுபட்டுழைக்கிறார்களோ—அவர்களெல்லாரும் (கோவணாண்டியாயிருந்தாலும் குபேரனுயிருந்தாலும் சரி) பகவானுக்கருமையான பக்தர்களே. ஸத்யத்தை நம்பி "ஸத்யமே விதி, ஸத்யமே கதி, ஸத்யமே ஜயம்" என்று யார் நடக்கிறார்களோ அவர்களெல்லாரும் பகவத்பக்தர்களே. ஏனெனில் சகுணப்ரம்மஸ்வரூபமான ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்துக்குப் பின், "சுத்த முத்த புத்த" ஸ்வரூபமான அறிவே யுருவெடுத்தது போலும் புத்தாவதாரம் எப்படி உண்டாயிற்றோ, அப்படியே, அந்த அறிவுமயமாயிருந்து போதித்த புத்தாவதாரத்துக்குப் பின் அவர் போதித்த போதனையாம் "கொள்கைமயமான" "கற்கியவதாரம்" நேரவேண்டியது சகஜந்தானே! ஆகையால் "கொள்கைமயமாயவதரித்துள்ள பகவானை" எந்தப் புண்யசீலர்கள் கற்கைரூபமாய் ஆராதித்து, அனுசரணை ரூபமாய் அப்பியாசம் செய்து, நடத்தைரூபமாய் அனுபவிக்கிறார்களோ அவர்களே பகவானுக்கு ஆப்த பந்துவாகி அவருடைய சாயுஜ்ஜிய ஸாம்ராஜ்யத்துக்கும் பாத்தியதை யுடையவர்களாகிறார்கள். இப்படிப்பட்டவர்களில் ஒருவராயிருந்த மிஸ்டர் எல். ஸி. இன்ஸ் தேகவியோகமான செய்தியால்

உண்மையாகவே நம்முள்ளத்திலுதிக்கலான எண்ணங்களையுள்ளபடியுரைத்தல் சாத்தியமாயில்லை.

> "நினைப்பதொன்று கண்டிலே னீயலாது வேறிலை
> நினைப்புமாய் மறப்புமாய் நின்றமாய்கை மாய்கையை
> அனைத்துமா யகண்டமா யனாதிமுன் னனாதியாய்
> எனக்குள்நீ யுனக்குள்நா னிருக்குமாற தெவ்வனே."
>
> —சிவவாக்கியர்.

ஆயினும் அவரால் இத்தேசத்துக்குண்டான நன்மையைச் சிறிது சொல்லாது விட இஷ்டமில்லை. அவர் இங்கே ஸிவில் ஸெர்விஸ் உத்தியோகஸ்தராக வந்ததும், ஹைகோர்ட்டு ஜட்ஜாகவும், ஆக்டிங் சீப்ஜஸ்டிஸாகவு மிருந்துழைத்ததும், யூனிவர்ஸிடி வைஸ்சான்ஸெலாராகக் கல்வி விஷயத்திலவரெடுத்துக்கொண்ட சிரத்தையும் மற்றுமவர்செய்த பேருதவிகளும் அவ்வக்காலக் கிரந்தங்களில் பதியப் பெற்றிருப்பதால் சரித்திர சம்பந்தமானவையாகப் போய்விட்டன. இவர் காலகதியாகையில் இவருக்கு வயது 81. சுமார் இருபது வருஷகாலமாக இவர் பென்ஷன்பெற்றுத் தனிமையாயிருந்தகாலத்தில் முதல் 10 வருஷங்களில் இவருடைய பரிச்சயம்பெறும்பாக்கியம் நாம் பெறவில்லை. பின் பத்துவருஷங்களில் இவருடைய மனோதர்மங்களையும் எண்ணங்களையும் நாம் நன்றாக அறிந்துள்ளோம். விவேகசிந்தாமணியில் மஹத்தான பெரியவிஷயங்களைப்பற்றி தீரமும் துணிவுங்கொண்டு நாமெழுத நேரிட்டதும் அவ்வழியில் தொடர்ந்துழைக்க துனிப்பில்மேயும் நம்மவர்கள் ஆழ்ந்து பார்த்துச் சிந்தியாது கூறிய குற்றங்குறைகளை லக்ஷியஞ்செய்யாது நாம் நன்மை கடைப்பிடித்து நின்றுழைக்க நேர்ந்ததும் நெருங்கிப்பழகிய இவருடைய உண்மை நேசத்தாலும் ஆதரவாலுமே விசேஷமாகவுண்டாயிற்று. வித்யா விஷயத்திலும், ஸத்யமத ஸித்தாந்த விஷயத்திலும் இவர் கள்ளங்கபடின்றி தம் அபிப்பிராயத்தை அலுப்பு சலிப்புப் பாராமலும், விருத்தாப்பியத்தாலுண்டான அசக்தியையுங் கூடச் சில சமயங்களில் பாராட்டாமலும் இவர் எழுதிய கடிதங்களால் நமக்குண்டான ஊக்கமும் உற்சாகமும் இவ்வளவென்று அளவிட்டுச்சொல்ல முடியாது. நாம் உண்மை விளங்கவேண்டி பத்திருபது பக்கங்கள் நிறைந்த கடிதமெழுதினால், அவ்வளவையும் ஆரத்திர வாசித்துச் சிந்தித்து தீர்க்க புத்தியோடும் தேர்ந்த அனுபவத்தோடும் பத்துப் பதினைந்து பக்கங்கள் நிறையத்தம் அனுபவ பூர்ணமான அபிப்பிராயத்தைச் சிறிதுங் குறைவின்றி யெழுதி யனுப்புவார். ஜஸ்டிஸ் ரானடேயவர்கள் தம்மனுபவத்தை யிவ்வாறு ஒரு சமயம் நமக்குச் சொல்லி யுதவியதுண்டு. பச்சைமரத்தாணிபோல் அது இன்னும் நம்மனதில் பதிந்துள்ளது. இப்படிப்பட்ட அனுபவிகள் உண்மையாகச் செய்யத்தக்க தேச நன்மை, தாங்கள் செய்யும் தேகமுயற்சியாலின்றி தங்களது அனுபவ முதிர்ந்த மனப் பழக்கத்தாலுண்டான தேர்ச்சியை உள்ளன்போடு உண்மைக்குழைக்கிறவர்களுக்குப் புகட்டுவதேயாம். இந்த விதத்தில் இவர் செய்த நன்மை அளவிடற் பாலதன்றாம். பணத்திலும் குணமே பெரிதால் அக்குணத்தை வளர்க்க இவர்கள் செய்த உபகாரம் சூரிய சந்திரர்களுள்ளமட்டு மிருந்து பயனைத்தரும். நம்மைப்போல் இவர் இன்னும் அனேகருக்கு இப்படி யுண்மை யுதவி செய்திருக்கிறார். சென்ற வருஷம் ஜூலை மாசத்தில் இவர் நமக்கெழுதிய கடிதம் தற்சமயம் யாவருக்கும் இவருடைய உண்மைக்குணத்தை விளக்குவதாயிருக்குமால் அதைக்கீழே பிரசுரிக்கிறோம். இவர் 10 வருஷங்கள் முன் இந்தியா மஹாஜனங்களிடத்து வைத்த அன்பால் கற்ற தமிழை அவ்வன்பு காரணமாகவே வளர்த்துவரக் கருதி அப்பொழுதுள்ள தமிழ்ப் பத்திரிகைகளில் தக்கதொன்றைத் தனக்கு வாசிக்க உபயோகமானதாகச் சிபார்சுசெய்ய வேண்டுமென்று டாக்டர் போப்துரைக்கு எழுதிக்கேட்க அவர் விவேகசிந்தாமணியைச் சிபார்சு செய்தாரென்றும் ஆதலால் அதற்குத் தன்னையொரு சந்தாதாராராகச் சேர்த்துக்கொண்டு பத்திரிகை யனுப்பவேண்டுமென்றும் முதல் முதல் நமக்குக் கடிதமெழுதினார். இதனாலுண்டான பரிச்சயம் இந்தப் பத்து வருஷமாக மேன்மேலும் வளர்ந்து பெருகி பரஸ்பரம் ஹிருதயானுபவ சுகதுக்கங்களைச் சொல்லிக் கொள்ளும்படியாக வளர்ந்தது. இந்தப் பத்து வருஷகாலமாக விவேகசிந்தாமணியில் எந்த விஷயம் அல்லது அபிப்பிராயம் விசேஷமாக விருந்தாலும் அதைப் பற்றியவருடைய அபிப்பிராயம் நமக்குக் கிட்டுவது நிச்சயம். விரிவஞ்சி மேலெழுதுவதை நிறுத்தி அவரெழுதிய கடிதத்தை மட்டும் கீழே பிரசுரிக்கிறோம். அவருடைய நண்பர்களெல்லாம் அவர் கோறினபடி இதையே அவருடைய கடைசி ஞாபகக்குறிப் பாகக்கொள்வார்களென்று பிரார்த்திக்கிறோம.

ENNORE, SOUTH PARK, SEVENOAKS, 8TH JULY 1904.

MY DEAR MR. S—, I am afraid I ought long ago to have acknowledged your very kind letter of Febry. 4. I can only excuse myself on the score of constant ill-health. The first half-year of 1904 has been very trying to me, as the winter was long and the spring unusually cold. It is only in the last fortnight that we have begun to experience a spell of genial warmth. Your letter of 4th February gave me a great deal of pleasure. I feel very grateful to God that I should have had the power to be helpful to you in the way you mention and I rejoice to think that you have attained to so high a plane of spiritual life, as from your letter I recognise you must have arrived at. I hope that your health has been good since you wrote, and that you have succeeded in the purpose of your life-object of improving the social and moral conditions of your countrymen. I am sending you through the Post Office 10 shillings for the Magazine and postage by this mail. I did not receive with the April No. the index which should, I believe, accompany it.. Believe me with kindest regards and best wishes,

yours very sincerely,

L. C. INNES.

Remember me to all kind friends.

(1-வது-மெட்டு என்பது-பள்ளுராகம்.)

## அனந்தங்காடு ஸ்ரீவாங்கள் என்கிற சந்நியாசி செய்தபூசையும் அனந்தபத்மநாபர் ஸ்தோத்திரமும்

(From Sri. R. S. Subbalakshmi Ammal.)

(122-வது பக்கத்தொடர்ச்சி.)

ஸ்ரீ வாங்கள் தானும் கண்விழித்து
திடுக்கிட்டு அவரைப்பார்ப்பளவில்,
சிதறியே அங்கே பூமலரும்
ஸ்ரீ துளசிவன மாலைகளும்
உதரியே பூஜா திரவியமும்
உன்னிதமான சித்தடியழகும்
பெருமான் வடிவமும் காணமல்
பெருமூச்செறிந்து பிரமைத்து நின்றார்

துய்யக்கோபால கிருஷ்ணராயா(நீர்)
சிறுவராயிங்கே தோன்றினதை
ஐயோ நான் சற்றும் அறிகிலேனே
ஆதி பிர்மமென்று உணர்ந்திலேனே
பகலவன் தோன்றி மறைந்தாப்போல்
பந்துஜனங்களைப் பிரிந்தாப்போல்
பொய்யாமந்திரப் பொருளோனே
புண்ணிய மூர்த்தியைக்காணேனே !

(அவர்) சங்கையில்லாமல் பூஜைசெய்த
சாளிக்கிராமச் சிவலிங்கமும்
கையில் தெண்டுகமண்டலமும்
கடுகி எடுத்தவர் கண்ணீரோடே
துய்யகாஷாயம் மூட்டைகட்டி
தோளில்போட்டவர் அடைவாக
வையகம் அளந்த மாயவர்தன்
மலரடிதன்னைத் தேடவென்றே
நாராயண அபயமென்று
நாடியே அங்கே தேடிவந்தார்.

கண்மணிபோன பேர்களைப்போல்
கன்றை இழந்த பசுக்களைப்போல்
மாடம் மாணிக்கம் போனவர்கள்
மனஸ்தாபத்துடன் தேடுவர்போல்
செம்பொன் திரவியம் இழந்தவர்கள்
சோகத்துடன்கூடத் தேடுவர்போல்
பொன்னும்அணிபூஷணங்கள் போய்
பிரமித்து மானிடர் திகைத்தாப்போல்
அன்னைதந்தை தனைப்பிரிந்து
அறியாமதலைகள் அழுதாப்போல்
கொஞ்சுங் கிளிகளும் அன்னங்களும்
கூடி இனங்களைப் பிரிந்தாப்போல்
(அவர்) ஒன்றும் தெரியாதே தானுருகி
ஓங்காரப்பொருளைத் தேடலுற்றார்.

(உ-வது) வேறுமெட்டு.

I தளர் நடையுடன் தாளடிகளும்
தாமரையிதழ்போல் நயனமும்
இளமையான திருமேனியுடன்
எதிரில்லாத கபோலஸ்தலமும்.

2 குறுகிப்பிரிந்தகுங் குமத்தோளும்
குணுக்கசைகின்ற பாவனையும்
அழகொழுகியதிரு மார்புதனில்
அணிந்த துளவி மாலையும்.

3 புலிநகத்துடன் பூஷணங்களும்
பொன்னும் மாலையும் பதக்கமும்
விலையில்லாத சிறுக்கைத்தளத்தில்
வெண்ணையும்பர மான்னமும்.—

4 வடிவு இந்தப்படிக்கே என்முன்
வந்தபால முகுந்தனே
(என்) இடர்கள்தீரவே மழலைச்சொல்லுடன்
இன்னமொருக்கால் தோன்றி நில்லும்.

5 கிண்கிணி கொஞ்சவே சதங்கை குலுங்கவே
கிருபையுடன் திருக் கூத்தாடும். [மே.
(என்) செம்பொன்னேமுத்தே இந்திர நீல
இன்னமொருக்கால் தோன்றி நில்லும்.

6 கெந்தம் புனுகு வாஸனையுடன்
கீறுநாமம் துலங்கவே
இந்தவனத்திலே யென்கண்குளிரவே
இன்னமொருக்கால் தோன்றி நில்லும்.

7 கண்டலம் காரை கனகசேவடி
கெட்டிமுத்து பொன் காரைதாழவே
எங்காமல் இந்த அடியான் முன்னே
இராயனே வந்துதோன்றி நில்லும்.

8 மதாணியுடனே மகரக்குழலும்
மணிமகுடமும் துலங்கவே
என் கலக்கந்தீரவே இந்தவனத்திலே
கடல்வர்ணவந்து தோன்றிநில்லும்.

9 தொங்கும் சுட்டியும் பொன்னும் பூவும்
சுருண்டமயிர்க்கத்தை விளங்கவே
எங்காமல் ஏழை அடியான் முன்னே
ராகவனே வந்து தோன்றி நில்லும்.

10 ஒரு தாள் தனைத்தூக்கி அழகாய் உறியில்
வெண்ணெய்க்குக்கை யேந்தி நிற்கும்
இருபாத தெரிசனந்தந்து
இராமனே நீர் தோன்றி நில்லும்.

11 பாடுங்கனிவாயில் அமிர்தஞ்சிந்தவே
அஞ்சனக்கண்ணைப் பிசைந்தழுதாகியே
(எந்தன்) சிவபூஜையில்நின்ற கோலம்போல
இன்னமொருதரம் தோன்றி நில்லும்.

12 மதமதென்னவே தயிர்த்திரளைகள்
வந்துமேனியில் தெரிக்கவே
தாழியின் பக்கத்தில் தாமரைக்கையேந்தும்
சுவாமியே என்முன் தோன்றி நில்லும்.

13 கொஞ்சிக்கொஞ்சிப்பேசி வெண்ணெய் தா
கோபாலரோடே திருவடியின் [வென்றும்
அந்தப்பிரதாபமும் ஆண்டவன்சேர்வையும்
அங்கங்குளிர நான் காண்பேனோ!

14 இந்தப்பிரபஞ்சமும் ஈரேழுலோகமும்
எதிரில்லாஞானப் பொருள்வந்து
தொங்தோமென்றாட இன்னமொருதரம்
ஸ்ரீகிருஷ்ண உனைக்காண்பேனோ!

15 அண்டர்தேடியும் காணாதசெல்வமே
ஆண்டவரே இங்கே தோன்றிநில்லும்
பூச்செண்டு கையில் தரித்தமாயோனே
(பரி) பூரண வந்து தோன்றிநில்லும்.

16 குந்தியார்தன் இடர்கள் தீர்த்தோனே
சோபாலா வந்து தோன்றி நில்லும்
குன்றால் மாரி மழைதடுத்தோனே
கோவிந்தா வந்து தோன்றிநில்லும்.

(1-வது மெட்டுப்போல் பாடவேண்டியது)

பக்தரும் இங்கே தான் புலம்பி
பதிதபாவனரைக் காணாமல்
சித்திரமான தென்மலையாளம்
திருஅனந்தரைத் தேடி வந்தார்.

பொற்சலங்கையும் சலுங் சலுங்க
பொன்னுங் கிண்கிணி ஓசையிட
அற்புதமான பாலகரின்
அடியோசைகேட்டு எதுசொல்வார்.

சொல்லி நடவீரோ சுந்திரரே
தோன்றி நில்லீரோ எந்தன்முன்னே
கல்லைப் பெண்ணாக்கிக் கிருபையளித்தி
கமலநயனரே காளமேகா!

## (3-வது) வேறுமெட்டு.

நில்லாமற் சற்றும் சிந்தித்துப்போனால்
(என்)உள்ளந்தளராதோஉந்நிதகிருஷ்ண
வண்ணக்கிருஷ்ணனே பாலகோபாலா
வெண்ணய் ஏந்துங்கை வேணுகானனே
இன்பமுடைய லெட்சுமிமாதும்
எத்தமுள்ள முனிவர் [illegible]ளும்
புண்ணியஞ்செய்த யோகிபுருஷாளும்
புத்தியில்வைக்கும் பொற்பாத மூர்த்தி!

இத்தனை தூரம் வழியும் நடந்தீர்
மெத்தச்செவக்குமே மெல்லியபாதம்
அடியார்க்கெளியனென்றறிந்திடாமலே
அபசாரஞ்செய்தேன் ஆதிதேவனே!
மெய்ப்பொருள் வந்து விளையாடி நிற்க
(என்) விதிவசத்தினால் அறியாமற்போ
ஒரு பிழைசெய்தேன் உலகநாயகா [னேன்.
சரியில்லாதொரு சார்வபௌமனே!

தெரியாமல் செய்த பிழை பொறுத்திடும்
சக்ராயுதாதரணி நாயகா!

கொடூரமானதோர்சிம்மம் கரடிகள்
(தம்) குழந்தையிடம் தம் கோபங்காட்டு
ஈன்றபசுமேல் இளங்கன்றுபாய்ந்தால் [மோ
எதிர்த்தடிக்குமோ ஏழைபங்காளி!
சுற்றிலுமுள்ள பூமரங்களா
சுந்தரமூர்த்திரூபங்கண்டீர்களோ!

பட்சிராஜனை பாபநாசனை
பச்சைமேனியன் பவனிகண்டீர்களோ!
பச்சைத்துளசியும் பிச்சிமாலையும்
பட்டுக்குல்லாவும் அங்கியும் தாழ
மற்றுமுள்ளதோர் பாலசோபையும்
வலதுகரத்தில் மகரக்குழலும்
கொத்துங்கருங்குழல் கோலமேனியன்
கோமளரூபன் வந்தாரோ சொல்லாய்!

வந்தாரோசொல்லாய் வனத்துவாவிகாள்
(என்மனதிற்) குடிகொண்ட பாலன் வந்
[தாரோ!
ஓங்கி அதட்டி நின்றவர் முன்னே
தோன்றுவதில்லை!யென்றொளித்தாரோ!
இந்தவனத்தின் மான்கலைகளா
என்னையாண்டவரிங்கே வந்தாரோ!
எந்தத்திக்கிலே போய் மறைந்தாரோ
என்குலதெய்வமிங்கே கண்டீர்களோ!

காதற்கிளிகாள் கரைமனையாரே
சாலைமரத்தின் சோலைக்குயில்காள்
பூக்கள் பொன்மணிச் சிந்தித்திங்ஙனே
பூர்ணஸ்வரூபர் வந்தாரோ சொல்வாய்!
வந்தாரோசொல்லு பாலமுகுந்தன்
செந்தாமரையின் வண்டினங்களா!
மந்தாரை மாலை மாரில் அசைய
மாணிக்கச்சுற்றி நெற்றியில் மின்ன
செம்பவழவாய் அதரச்சோபையும்
சற்றே உம்முடை சாயலுங்காட்டி
பிருந்தாவனத்தின் வேணுகானனே
வேதநாயகா மெல்லியர்தோழா
கொஞ்சும் கனிவாயின் கோலமழலைச்சொல்
(என்) கோமளரூபா கோபாலகிருஷ்ண
அஞ்சினேன்ஹரி அஞ்சினேன்ஹரி!
ஆதிமூலமே சஞ்சலந்தீரும்!

(1-வது மெட்டுப்போல் பாடவேணும்.)

சூடும் வனமாலை மார்பழகா
துளவிப்பூஷண சுந்திரனே
கோடி ஜன்மம்நான் தபஞ்செய்தாலும்
(உம்ம) கோலங்காண்பேனோ காணேனோ
காண்பேனோ உன்றன் திருமுகத்தை
கருணைபொழியும் நயனங்களை
வேணு கிண்கிணி பீலிதாழ
விஸ்வமூர்த்தியின் வடிவழகை
பச்சைமேனியும் பவழவாயும்
உச்சிதமாகவே தோன்றிநில்லும்.

கோபிகைஜோரா! வெண்ணைக்காடும்
கோவிந்தாவந்து தோன்றி நில்லும்.
கோபாலா என் குருநாதா
(உம்ம) கோபம் நான் சற்றும் அறிந்தில [னே!
மானிடமைந்தர் போலவே நீர்
பாலகராய் வந்து தோன்றி நில்லும்.
தேவா உன்றன் மனதிலுள்ள
(நான்) செய்த பிழையை மனம்பொருத் [து
(என்) ஆவிக்கரசே நான் அலையாமல்
அனந்தவீரனே தோன்றி நில்லும்.

1 உந்திக்கமலத்தில் பிரமன்வர
ஸோமுகன் வேதத்தைக் கொண்டொளி [க்க
தந்திரமாக அஸுரன் தன்னை
ஸாகரந்தன்னில் விழவடித்து
ஈரேழுலோகமுந் தான்பிழைக்க
மஸ்யரூபம் எடுத்தவரே!

2 நின்றமந்திரம் மத்தாகி
நீண்டவாஸுகி கயிறாகி
அன்று அமிர்தம் கடைகையிலே
ஆமைரூபம் எடுத்தவரே!
சொர்ணபூஷண மோகினியாய்
தோன்றி நின்று சபைநடுவே
சென்றேதேவர்க்கு அமிர்தமீயும்
செந்தாமரைக்கண்ணா தோன்றி நில்லும்.

3 பூமியைப்பாயாய்த்தான்சுருட்டி
பிலத்துவாரத்தில் போய்ஒளிக்க
தந்திரமாக ஹிரண்ணியாக்ஷனை
தந்தக்கோட்டினால் விழவடித்த
சுந்தரரூபச் சோதியனே
துய்யலெக்ஷ்மி நாயகனே
வராகமூர்த்தம் முகத்தோனே
வந்து என்முன்னே தோன்றிநில்லும்.

4 திருப்பாற்கடல் மத்திதன்னில்
சேஷணைமேல் பள்ளிகொண்ட
ஸ்ரீஹரியைத் தேடித்
தேவரெல்லாம் ஸ்தோத்தரிக்க,
அப்போது அவதரித்தீர்
அசுரர்குலம் வேரறுக்க,
நரஸிங்கமூர்த்தி யாவந்து
நம்பினபக்தர் இடர்தீர்க்க
துஷ்ட ஹிரண்யனை சம்ஹரித்த
ஜோதிரூபனே தோன்றிநில்லும்.

5 பக்தாள்வினை தீர்க்க வேணுமென்றே
பாரேழுங் கீர்த்தி தான் விளங்க
அஷ்டதிக் பாலாள் வாழவென்றே
அகிலம் ஈரேழும் தான்அளக்க
துஷ்டாள் வதமபண்ண வேண்டுமென்று
திருவிக்கிரம வடிவுகொள்ள
பொட்டெனச்சென்று அத்திரியர்க்குப்
புத்திரனாக அவதரித்து
மகாபலியோட சாலைபூந்து
பாலகராகி மண்ணளந்தீர்
வஞ்சனையாக வளர்ந்தளந்த
வாமனா வந்து தோன்றி நில்லும்.

6 பரசுராமனாய் வந்துதித்து
பக்தியுள்ளதோர் வேதியர்க்கு
தபஸுசெய்தே அடிபணிந்த
(சிவ) சங்கரர்கையில் அஸ்திரம்வாங்கி
அரசர்குலத்தின் வேரறுத்து
அங்கமெங்கும் மிகவிளங்க
குருதியில் தர்ப்பணந் தான் முடித்த
கோபாலாவந்து தோன்றி நில்லும்.

7 தோன்றினபின்பு தசரதர்க்கு
சூரியவம்சம் செழிக்கவென்றே
பூரணாவதார மாகிவந்து
பூமிபாரங்கள் நீக்கிவைத்தீர்
சீதைமணவாளா இரகுவீரா
ஸ்ரீராமா வந்து தோன்றிநில்லும்.

8 பரிவுடன்வந்து ரோகிணிக்கு
பலராமனாய் அவதரித்து
பங்கயத்தோழர் தன்னுடனே
பாங்காய்விளையாடி கோகுலத்தில்
கலப்பையாகிற ஆயுதத்தால்
கவியினங்களைத்தான் அடித்து
மங்களம்மான மார்பழகா
மாயவரேவந்து தோன்றிநில்லும்,

9 வந்துதேவர்கள் முறையிடவே
வஸுதேவருக்கு மைந்தராகி
நந்தகோபக் குமாரனுமாய்
நல்ல ஆயர்பாடியில் வளர்ந்து
பங்கயத்தோழர் மனம்மகிழ
பசுமரத்தங்கே விளையாடி
செங்கையிற்றான் சிறுகோலேந்தி
செம்பொன் வேணுவும் தோளில்சாத்தி
எங்கும் நிறைந்ததோர் தோழருடன்
யமுனைக்கரையிலே நின்றகோலமா
யின்னமொருக்கால் என்கண்குளிர
மீண்டும் முன்வந்து தோன்றிநில்லும்.

10 பார்த்தசாரதி யாகவிருந்து
பரிவுடன் அந்தத்தேரேறி
கூற்றுவர்போன்ற நூற்றுவரின்
குருஜனங்களை விழவடித்து
வேதசாஸ்திரோப தேசமுடன்
விஸ்வரூபங்காட்டி விஜயனுக்கு
தேர்த்தட்டின் மேலே நின்றகோலமாய்
ஸ்ரீகிருஷ்ணா என்முன் தோன்றி நில்லும்.

11 பூமியிலுள்ள புழுதிகளெல்லாம்
புத்திதெரிந்து எண்ணிடலாம்;
என் ஆதிஅய்யன்செய்த அவதாரம்
ஆராலும் எண்ணிமுடியாது.
சேவிக்கஅரிதான திரவியமே
சென்மஸாகரம் தீர்ப்போனே

(உம்மை) சேவிக்கறியாமல்ஜென்மித்தநான்
ஜெனனமரணத்தால் மிகத்தளர்ந்தேன்.

12 மாதாவின்முலைப் பால்குடித்து
மறித்தும் நானிங்கேபிறவாதே
ஆவிக்கரசே நான் அலையாதே
அனந்தவீரனே தோன்றிநில்லும்!
சிந்தைக்கறியாத மேனியனே (நான்)
திரும்பிக்கலிகையில் பிறவாதே
ஆதியந்தமில்லா சுந்தரனே
ஆதிமூலமே தோன்றி நில்லும்!
அறிவாந்தகார இருள் நீங்க
ஆதித்தியனாகத் தோன்றி நில்லும்
மந்தஹாஸ முகத்தோனே
மாய்கையை நீக்கும் என் மாதவரே!

(4-வது) மெட்டு......தாலாட்டுராகம்.

சப்தரஸமாதுவாகி சத்வகுணமூர்த்தியுமாய்
இஷ்டமுடன் லீலைசெய்யும் யசோதை புத்திரனாய்
சிருஷ்டிஸ்திதிப்பொருளாய் சம்ஹாரகர்த்தனுமாய்
வஸ்து உருவாகிநின்ற மதனகோபாலனன்றோ!
ஆதாரமாகி யனைத்துயிர்க்குச் சாக்ஷியுமாய்
மாதவமாம் தீபம மறைந்தொளித்தாலெப்படியோ!
பழுதையைப்பாம்பென்று பயந்த மனிதருக்குத்
துணைவிளக்காய் நின்றுமல்லோ சோகந்தணிப்ப
துவும்!
இனியிரக்கமன்றியிலே இப்படிநீர் போய்மறைந்தால்
(உம்ம) கடும்வழி காணக்காரணரே நானறியேன்!
மனதின் அழுக்காலும் மாய்கையின் மறைப்பாலும்
அறிவிழந்தேன் அப்பாவே அண்டமெல்லாம் உண்
டவரே!
அண்டமளந்து அப்பாலும் தான்வளர்ந்த
திண்டோள்மணிமகுடம்துலங்க இங்கேவாருமய்யா!
அலையாதே என்று அபயஸ்தம் தான்கொடுத்து
† ஹிருதயத்துரோபதைப்போல் ஈடேற்றவேணும
[ய்யா!
நம்பினபேரை நடுக்கடலில் தள்ளுவாரோ
தர்மமாய்வந்துதித்த சாந்தகுணமூர்த்தியன்றோ!
அடியாரைக்காக்கும் அனுசூயாபுத்திரனே
ஸ்ரீகெருடவாகனனே ஜென்மம் அறுத்தோனே
அம்புஜலோஜனரே ஆழிதரித்தோரே
பங்கஜநேத்திரனே பாற்கடலிற்பள்ளிகொள்ளும்
சங்கங்கரத்தோனே சாரங்கபாணியனே
கண்குளிர என்முன்னே கடல்வர்ணா தோன்றி நில்
[லும்!

இந்திராதி தேவருடன் ஏற்றமுள்ள நான்முகரும்
வந்தனைகள் செய்யும் மணிவண்ணா தோன்றி நில்
[லும்!
கானலைத்தண்ணீரென்று கலங்கிய மானிடர்க்கு
தானே அமிர்தமாய் தாபந்தணிப்போனே
அளவிடப்போகாத ஆனந்தநிஷ்களனே
நினைவழிந்து சொல்லிவிட்டேன் நிர்மலனே தோன்
[றீரோ!
பலகாலம்பூஜைசெய்தேன் பரமனைக்காணவென்றே
அணுமாத்திரந்தவறிப் போனேன்நான் ஆதியனே
பொன்னின் ஒளிபோலும் பூவின் மணம்போலும்
எள்ளுக்குள் எண்ணெயைப்போல் எங்கிலும் நிற்
[போனே
அறியாதபேர்களுக்கு அகலநிற்குமாப்போலே
கடுமாய்கை ஏவிஎன்றன் கண்ணுக்கொளித்துவிட்
[டீர்!
சிதேந்திரியனான ஜீவர்க்குந்தோன்றுவீர்
பேதங்களற்ற பெரியோரிடம் உறைவீர்
ஆகையினாலும்மை அடியான் அறிந்திடலாம்
(என்)மாய்கையைநீக்கிமணிவர்ணாதோன்றிநில்லும்!
மருவுமமிர்தமுமாய் மறுகரையில்லாதவராய்
பெருகினதீயாகி பேதமற்ற வஸ்துவாய்
அரியமறைப்பொருளாய் ஆத்மஸ்வரூபருமாய்
மூணுகுணமாகிநின்ற முக்திப்பிரகாசருமாய்
இந்திரியதேவதையாய் ஹிருதயத்தின் மூர்த்தியு
[மாய்!
ஜெந்துமுதற் சேதனர்க்கு சீவாத்மாஆகிநின்றீர்!
கோடிதபம்செய்தேன் குருபக்திதன்னாலே
தேடியுங்காணறியேன் செங்கமலபொற்பாதம்
ஏழைஅடியான் இருந்துபுலம்புகிறேன்
பாலமுகுந்தா பட்சமுடன்காருமய்யா!
முன்னமேசெகப்பு முகுந்தனே உன்பாதம்
இன்னங்கடுஞ்செகப்பாய் இத்தனை தூரந்திரிந்தோம்
மின்னுங்கருடன்மேல் வீற்றிருக்கும் அய்ஸபதம்
பொன்னடியும் நோகாதோ போதுமிங்கே வாரும
[ய்யா!
ஆக்கமுடையான் அமிர்தக்கடைக்கண்ணான்
காத்தமுதலைக் கைநழுவத் தள்ளுவரோ
சந்நியாசயோகந்தவறியே போய்விழுந்தால்
பின்னே எனக்குப் பிழைப்புண்டோமாதவரே!
என்னபிழைசெய்தாலும் என்றனை நீர்காத்தருளும்
பொன்னே கிருபையுடனே பூர்ணதயைசெய்யும
[ய்யா!
பங்கஜபுஷ்பங்கள் (உம்) பார்வைக்கு நாணிநின்று
அங்கே பகவான் அடிமலரைக்காண அஞ்சி

† துரோபதை வஸ்திராபகரண காலத்தில் மகிதலத்தரசரும் மாண்புடை கணவரும் தன்னை ரக்ஷிக்க மாட்டாமற் போனதை நினைந்து நைந்துருகி த்ரௌபதாதேவி அனாதரக்ஷகனும் ஆபத்பாந்தவனுமாகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானை நினைந்து அச்சமயத்தில் வந்து மானஸம்ரக்ஷணம் செய்ய வேண்டிப் பிரார்த்தித்தாள். அப்பொழுது அவள் "துவாரகாபுரிவாஸா! வென்றழைக்க ஸ்வாமி பையப்பைய தூரத்தில் வந்து கொண்டிருந்தார். அவசரம் பொறுக்காமல் ஹிருதயகமலவாஸா! வென்றழைக்கவும் இதோவந்தே னென்றவளைக் கட்டிக்கொண்டு அந்தக்ஷணமே மானஸம்ரக்ஷணம்செய்தருளினார்" என்பது ஐதிகம்.

தங்களினங்கூடத் தலைகுனிந்து லஜ்ஜையுடன்
தடாக மத்தியிலே தான்குனிந்து நின்றதகள்.
தங்கப்பணிகளெல்லாம் தலைகுனிந்து லஜ்ஜையுடன்
(உம்) சங்குவரிக்கழுத்தில் தானொளிந்து நின்றனவே.
அங்கியும்மின்ன அழகுரெத்னக்கண்ணருக்கு
செங்கதிரோன்கூடச்சேர்ந்திருக்கக் கூசுவனே!
கண்கள் தாம்கொள்ளாதே கபோலஸ்தலவழகு!
கண்ணாடிபோன்ற காந்தியுள்ளமேனியனே!
உன்னிதழூக்கும் உபயமுழியழகும்
(என்) மன்மதரூபா வருக வருகவிங்கே!

(1-வது மெட்டுப்படி சொல்லவும்)

அமிர்தமயமான பிரம்மானந்தர்
அம்சத்தால் மூணுகுணமாகி
நிமிஷந்தன்னிலே லீலையாக
நிர்மாணம்பண்ணி நீடுலகை
அவனிதனக்கொரு அதிபதியாய்
ஆதாரமான அரசனுமாய்
புவனம் நிறைந்த எல் நாதன்போனால்
பூலோகமெங்கும் கலங்காதோ!
பரமாத்மரூபா பரஞ்சோதியே
பரிவுடன் இங்கே தோன்றி நில்லும்.

ஆழிசூழ்ந்திடும் லோகம்முதல்
அந்தரிக்ஷமும் பாதாளமும்
வானுலகும் சந்திர சூரியனும்
வானவர்க்கும் முதல்வன்தானாகி
நாபி கமலத்தில் அயனைப்பெற்ற
ராஜனே வந்து தோன்றிநில்லும்.
என் ஆவிபோகுது வாருமென்றன்
அனந்தவீரனே என்றலற்றி
மனந்தளர்ந்திடக் கண்ணீர் சோர
மனோவேகத்துடன் வெகு வேகமாய்
அனந்தங்காட்டிலே வருகும்போது
அங்கே யோர்பள்ளி ஏதுசொல்வள்:
சென்னெல் விளைபூமி களைபறிக்க
சேர்ந்து கணவனுந்தானுமாக
(அவள்) சின்னப்பாலகன்தானழவே
சீரியே ஒரு வார்த்தை சொல்வள்:
"என்னை நீயொன்றும் செய்யொட்டாமல்
இங்ஙனே கரைந்தழுதையானால்
உன்னைநானிந்த அனந்தங்காட்டில்
தூக்கியே வீசி எரிவேனென்றாள்."
சிறிவரைந்திட்ட வார்த்தைகேட்டு
ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சிரித்துகந்தார்
அன்புடன் பள்ளி முகம்நோக்கி (யதி)
அனந்தங்காடெங்கே உரையுமென்றார்.
இதற்கப்புறந்தள்ளி அனந்தங்காடு
அடையாளங்களைப் பள்ளிசொன்னாள்.
சித்தங்கலங்கிய தவமுனிக்கு
முத்திகொடுக்கவே பகவான் எண்ணி
பக்தி சோதித்த பரமானந்தர்
பரம கிருபைபண்ணி திருமனதில்

குங்குமப்பூச்சுங் குமுகுமென்ன
கோபாலரோடே நடையசைய
ஆதிநாதன் கிருபையுடனே
அனந்தப்புரத்தின் நடுவேவந்தார்.
விஸ்தாரமான கையின் கோலும்
வெண்ணெய்க்கேந்தின கைத்தளமும்
அச்சுதரோடே திருநாமமும்
அரை வடத்துடன் கிண்கிணியும்
கொத்துச்சதங்கையும் சலுஞ்சலுங்க
குதித்துக்குதித்து கோபாலராடி
மற்றும் இலுப்பை மரமாகி
மதனகோபாலர் மறைந்து நின்றார்.

வாதாடி வந்த திரு நடையும்
வண்ணக்கிண்கிணி ஓசைகளும்
ஆதாளி அரவம் கேழ்க்காமல்
அந்த ஸ்ரீவாங்கள் மிக நடுங்கி
மாருதிதொழும் மார்பழகா
மாயமோ நீர் மறைந்ததுவும்
என் நாதன் மறைந்த இடமிதுவே
என்றுநாடியே அங்கு பார்ப்பளவில்
ஏதென்றறிந்தபின் போவோமென்று
ஏங்கி அவரங்கே நிற்கவுமே
சாந்தும் புனுகுஞ் சந்தனமும்
சாதிப்புஷ்பங்கள் பரிமளிக்க
மோதி ஆகாசம் மட்டுயர்ந்த
மிகுந்தக்கிளையுடன் விழுதுவிட்டு
சாங்கிய சாஸ்திரம் வேராகி
தருமங்கள் நாலும் இலையாகி
ஓதும் வேதங்கள் பூவாகி
உற்றகல்பங்கள் காயாகி
நாலுவேதப்பழத்தைக்கண்டு
நான்முகனென்னும் கிளி முகக்க
ஹேது வில்லாத அத்திசையில்
இடி முழக்கம்போல் ஓசையிட
ஆதி காலத்து இலுப்பமரம்
அனந்தங்காட்டிலே விழுந்ததப்போ!
விருக்ஷமானது கீழ் விழவே
மெள்ள வந்தங்கே ஸ்ரீவாங்களும்
(என்) பக்தி யறிந்த பரமன் தன்னை
பார்ப்பேனோவென்று பரிசுழன்றார்.
பொட்டெனச்சென்று பார்ப்பளவில்
சிந்தைகுளிரவே கண்டுகொண்டார்.

(4-வது) மெட்டுப்போல் தாலாட்டு

சிந்தை குளிர்ந்த தெரிசனையைக்காணவென்றால்
இந்திரனைப்போல் நயனம் என்றனுக்குத் தந்திலையே
தந்திலையே சோதைமைந்தா தாமரைபோல் ஆயிரங் [கண்
இந்த தெரிசனைக்கிரண்டு கண்கள் போதாதே!
திருவனந்தூர் முடிதாழ்த்தி திப்பாலூர்க்கால்நீட்டி
மருவுதிருவலதுகையினால் மணி முடிக்கு அணைசே [ர்த்து

தயவுடைய தாமரைக்கண் சந்நியாசி முகம்நோக்க
பரிபூர்ண கிருபையுடனே பாம்பணைமேல் பள்ளி
[கொண்டீர்.

(1-வது மெட்டுப்போல் சொல்லவும்.)

தேவர்கள் முனிவர்கள் சித்தர்களும்
திக்பாலகரும் கின்னரரும்
ஆதிநாதர் திருமுடிக்கு
அன்புடன் புஷ்பமாரி பெய்ய
சோதிச்சுடரொளிபோல் விளங்கும்
சுந்தரத்திருமேனி தான் விளங்க
பிரகாசிக்கும் முகமண்டலமும்
பச்சைமேனிகள் பளபளென்ன
(என்) நாதன் இடையில் பீதாம்பரமும்
நவரெத்ன அரைஞாணும் சோதிவிட
ஆலந்தளிரொத்த திருவயிறும்
அமைந்த அங்கியும் பின்னரையும்
ஹாரம் மணிமுத்து மாலைகளும்
அரைநூன்மாலை ஒளியழகும்
பாரமரகத மணி முடிமேல்
பத்மநாபன் கிரீடம் மின்ன
ஐந்து படத்தாலே அனந்தர் வந்து
ஆதி நாதர்க்குக் குடை பிடிக்க
கஞ்சமல ரொத்த பாத சேர்வை
கண்டு குளிரவே கண்டுகந்தார்.

உகந்துமே அந்த ஸ்ரீவாங்களும்
ஓங்காரப்பொருளைப்பணிந்தார்.
எழுந்திடும் வேளை எப்பவென்று
எற்றி நிற்கவே பக்ஷிராஜன்
பூமலர்தூவி அனைவர்களும்
போற்றி போற்றி என்றடிபணிய,
ச்யாமள ரூபர் சன்னதியில்
தவளச்சங்கங்கள் ஊதி நிற்க
அன்னம் விளையாடத் தென்றல் வீச
ஆயர் பாடிக்கிருஷ்ணன் கண்வளர
பொன்னுலகம்போல் அனந்தங்காட்டில்
புருஷோத்தமரும் தானமர்ந்தார்.

அங்கம் புளகித்து ஸ்ரீவாங்களும்
அனந்த பத்மநாபரை ஸ்தோத்தரிப்பர்:
பனிபோய் இருள்நீங்கிப் பாஸ்கரனும்
பாருலகில்வந்துதித்தாப்போல்,
ஓடைக்கமலங்கள் ஒரு நொடியில்
உள்ளங்குளிர்ந்தங்கே மலர்ந்தாப்போல்,
வாடும் பயிருக்கு மழைபொழிந்து
மனோகரமாகக் குளிர்ந்தாப்போல்,
தேடும் பூமியில் திரவியங்கள்
தரித்திரன் கையில் கிடைத்தாப்போல்,
அஞ்சனக்காரன் வெகு தனத்தை
ஆருமறியாமல் எடுத்தாப்போல்,
தஞ்சமென்றங்கே எடுத்தணைக்கும்
தாயைக்குழந்தைகள் கண்டாப்போல்,
கொஞ்சும கிளிகளும் அன்னங்களும்
கூடி இனங்களைச் சேர்ந்தாப்போல்,
சஞ்சலம் நீங்கியே கையைக்கூப்பி
சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார்.

(2-வது மெட்டுப்போல் பாடவும்.)

அனந்தங்கோடி சென்மமொழித்து
அடியானிடர்களைத் தீர்த்தோனே
தினந்தோறும்நான் தேடிய செல்வமே
ஸ்ரீ கிருஷ்ணனு வந்துதித்தோரே!
வஞ்சனையாலக் கஞ்சனைவதைத்து
வந்து லீலைகள் செய்தோரே!
அஞ்சனவண்ணனே ஆதிமூலமே
அன்புடன் இங்கே உதித்தவரே!
முனிவர்கள் இருஷிகள் மூர்த்தி மூவர்கள்
முப்பத்து முக்கோடி தேவர்கள்
இனிய லெக்ஷ்மி தேடிய செல்வமே
என் முன்னே வந்து உதித்தீரே!
ஹரி என்ற துணை காணுமல் பக்தன்
அலைகிறுனென்ன கிருபையுடனே
சரியில்லாத கோபால மூர்த்தியே
(இந்த) தாதுவில் வந்து உதித்தீரே!
ஆப்த பந்துவைக்காணுமல் பக்தன்
அலைகிறுனென்ற கருணையால்
மஹாத்மாவேஎன் பாலமுகுந்தரே
மரந்தன்னில் வந்து உதித்தீரே!

(விருத்தங்கள்மாதிரி சொல்லலாம்.)

அகல நில்லுமென்று சொனேன் ஆதிமூலப்பொ
[ருளை
நிர்மலரே நானுமுன்னை நித்தியரென்றெண்ணுதே
அடியேன் அபசாரம் செய்துவிட்டேன் ஆண்டவரே
பொறுத்தருள வேணுமய்யா புண்யபுருஷோத்தமரே
சகித்தருள வேணுமய்யா ஸத்வகுண சம்பன்னரே
இலங்கும்பணிகள் தரித்த இருபாத பங்கஜரே
இரங்கியே கலங்கியே மனமயங்கி நின்றவேளையிலே
அலையாமல் வந்துதித்த அனந்தபத்மநாபரன்றோ
தீர்க்கமுள்ள மேனியனை தெண்டங்கள் பண்ணிய
[வர்
மார்க்கமுடன் முக்காதம் வந்துபிரதக்ஷிணமாய்
காக்ஷியுடன் பூஜைபண்ணக் கையிலொன்று மல்லா
[மல்
பார்த்திருக்கும் வேளையிலே பட்டணத்துச் செட்டி
[வந்தான்
(அவன்) ஒற்றையுடுத்திக் கோடித்துணி போர்த்தி
பெற்ற தந்தைகளுக்குப் பிதுர் கர்மஞ் செய்யுதற்கு
பச்சை மாங்காய் எலையும் ஒணதல் அரிசியுந்தான்
செட்டிகையில் வாங்கி ஸ்ரீவாங்கள் பூஜை செய்
[தார்
சுத்திமணி குலுக்கி தூபதீபங்காட்டி
பத்தியுடன் நைவேத்தியம் பாங்குடனே செய்து
[மவர்

அல்ப்பகனி அரிசி அமுது செய்ய வேணுமென்க
பத்மநாபஸ்வாமி பரிவுடனே அமுது செய்தார்.
தேவர் மலர்சொரிய தேவதுந்துமி முழங்க
சாரணகந்தருவர் சங்கீதம் பாடி நிற்க
சிறந்தபுகழுடைய தென் அனந்தன் கண்வளர்ந்தார்.

(1-வது மெட்டுப்போல் சொல்லவும்)

அண்டம் ஈரேழும் அளந்த பாதம்
அடியான் தனக்காக அலைந்த பாதம்
புண்டரீகமலர் ஒத்தபாதம்
பூமங்கை நங்கை உறையும் பாதம்

கொண்டலாழி சூழ்ந்த மலையாளம்
கொல்லங்கொச்சியும் கோழிக்கோடும்
சங்கையற்றதோர் தென்தேசமதின்
தன்யர்கள் நின்று போற்றும் பாதம்
அங்கிப்பொற்சிலம்பணிந்த பாதம்
அடியான் தலைமேலே கொண்டபாதம்.

சென்மபந்தங் கழித்தெரித்து (ஸ்ரீவாங்கள்)
ஜெனனமரணசிக்கறுத்துமாய்கைநீக்கியே
வைகுண்டத்தில் மாறுதமுக்தியடைந்தார்.
வானவருமானவரும்வாழ்த்திப்பணிந்தார்
(பிரும்மார்ப்பணமஸ்து.)

ஓம்தத்ஸத்.

---

## THE BOYHOOD OF GREAT MEN OF THE WEST.—i. DR. JOHNSON:

## மேற்றிசை மேதையோர் பாலிய சரிதை.

### 1. டாக்டர் ஜான்சன்.

விருத்தம்.

மின்னு மேற்றிசை மேதையோர் பாலிய
நன்னயச்சரி தந்தனை நற்றமிழ்ச்
சொன்னயம் பெறச் சொற்றிட வசனமாய்
மன்னருட்கலை மாமகள் காப்பரோ.

---

சிறப்புற்றோங்கிய ஐரோப்பா கண்டத்தின்கண் நடுநாயகம்போல் துலங்கி விளங்கும் ஆங்கில நாட்டுப் புலவர்கள் பலருள் குறை குணங் கூறுவதில் வன்மை வாய்ந்த டாக்டர் ஜான்சன் என்பவரைப்பற்றிய பாலிய விருத்தாந்தத்தைச் சிறிது புகல்வோம். இவர் சிறுவயதில் வறுமைப் பிணியால் வருந்தினராயினும் தம்புந்திவன்மையால் அவற்றைச் சிறிதுமோராமல் வாணாளைச் சுகமே கழிக்கும் திறமை பூண்டனர். அழியா உடம்பெய்தினராய் 18-ம் நூற்றாண்டுப் புலவர்களில் இவர் சிகாமணியாய் விளங்கினர். ஜனங்களிடத்தில் அதிக செல்வாக்குப் பெற்று விசேட மதிப்புக்கு பாத்திரமாயினர். கல்வி கேள்விகளில் வல்லோர் இவருடைய நடை உடை பாவனைகளைப் பற்றியும், சினேகிதர்களுடன் அமுதுண்ணும் போழ்து இவர் பேசிய வியக்கத்தக்கதும் பரிகாசமுமான கூற்றுகளைப் பற்றியும் எடுத்தோதி அகமகிழ்வர். இவர் 1709-ஹு செப்டம்பர் மாதம் 18-ம் தேதி லிச்பீல்ட் (Lichfield) என்ற பட்டணத்தில் பிறந்தார். இவர் தகப்பனார் மிகேயல் ஜான்சன (Michael Johnson) (Derby) தர்பிமாகாணத்தவர். இவர் உயர்குடிப் பிறப்பின் மாட்சிமை யடையப் பெறறிலரேனும், புத்தக வியாபாரத் தொழிலை மேற்கொண்டு உஜ்ஜீவத்து வந்தார். தாயார் வூர்ஸெஸ்டர்ஷயர் (Worcestershire) மாகாணத்தில் ஒரு சிறந்த குடித்தன மரபிற் பிறந்து வளர்ந்தவள். பெற்றோர்களின் குணாதிசயங்கள் குழந்தை ஜான்சனிடம் பொலிவுற்று பிற்காலம் விளங்கிற்று. மிகேயல் ஜான்சன் இலத்தீன் பாஷையில் ஒரு சிறந்த வித்வானானதால் அவர் நன்கு மதிக்கப்பட்டு மேஜஸ்திரேட் வேலையில் நியமனம் பெற்றார். என்றாலும் அவருடைய நிலைமை பரிதபிக்கத்தக்கதாகவே யிருந்தது. இவர் ஓர் உயர்தரவாலயச் சீடரும் (High Church), ஜெகோபைட்ஸ் (Jacobites)* என்ற கூட்டத்தைச் சேர்ந்தவராதலின் தன் மகனும் இளமைப் பருவமுதற்கொண்டே தான் கொண்ட பிடிவாதமான கொள்கைகளையே பிறர் மனம் நோவச் சேயினும் சிறிதும் கவனியாமல் நிலை நிறுத்துவதிலேயே கண்ணாவிருந்தனன்.

இவர் தாயார் கல்வித்தேர்ச்சியற்றவளேனும் விவேகமும், யுக்திசாதனங்களும்நிரம்பப்பெற்றவள். பிர்காலம் தன் மகனை ஆசாரசீலனாயும் தீவிர தெய்வபக்தியுடையவனாகவும் செய்யக்கருதி தினந்தோறும் மதக்கிரந்தத்தினின்று பாடங்களைக் குறிப்பிட்டு அவற்றை வீட்டு வேலைக்காரனொருவனிடத்தில் ஒப்புவிக்கும்படியாய் திட்டஞ் செய்தாள். இவ்வேற்ப்பாட்டால் அவனது ஞாபக சக்தி பாலியத்திலேயே விருத்தியடைந்து வருவதற்கேதுவாயிற்று. இவரைப்பற்றி விசேஷமாய் சரித்திர ரூபமாய் எழுதியிராநின்ற பாஸ்வல் (Boswell) என்பவர் இவ்விளைனது ஞாபகசக்தியைப் புகழ்ந்து பின்வருமாறு

---

* ஜெகோபைட்ஸ் (Jacobites): ஆங்கிலதேசத்து சிங்காசனம் இழக்க நேரிட்ட இரண்டாம் ஜேம்ஸ்க்கும் அவனது சந்ததியாருக்கும் சேரவேண்டுமெனப் பிடிவாதமான கொள்கைகளைக் கொண்ட ஓர்கூட்டத்தார்.

கூறியுள்ளார். "சிறு பாலகனான தன் மகனுக்கு எழுத்துக் கூட்டி வாசிக்கத் தெரியவே தாயார் ஸ்தோத்ர பாட புஸ்தகத்தை கையிற் கொடுத்து படித்து ஒப்புவிக்கும்படி உத்தரவு செய்துவிட்டு மாடப்படியின் மீது போகத்தொடங்கினாள். அம்மாது அப்படிகளையெல்லாம் கடந்து செல்லுமுன்னர் தனக்குப் பின்னால் குழந்தை ஓடி வருவதைக் கண்டு வெகுண்டு ஏன் படியாமல் பின் தொடர்ந்து வருகிறாயென விரட்டிக் கேட்கவே அம்மா அந்தப் பாடம் எனக்கு நன்றாய்த் தெரியும். இதோ ஒப்புவிக்கிறேன் பார் என்று இரண்டு தரத்திற்கு மேல்படித்திரா விடினும் ஒரு வார்த்தை கூடப் பிழையின்றி தெளிவாய் சொல்லி முடிக்கவே தாயார் கேட்டு அளவற்ற ஆனந்த மடைந்தனள்." அவனுக்கு மூன்று வயது நிரம்புவதற்கு முன் ஒரு சமயம் 'இலிச்பீல்டு'க்கு பிரசங்கஞ்செய்வதில் கியாதிபெற்ற டாக்டர் 'சாசர்வெல்' (Dr. Sachervel) என்பவர் விஜயஞ் செய்தார். அப்போது அவர் செய்யும் உபந்நியாசத்தைக் கேட்க திரளான ஜனங்கள் வந்து கூடினார்கள். தன் தகப்பனார் தோளின்மீது ஏறிக்கொண்டு ஜான்சன் என்னும் பாலகன் அதிவிநயத்தோடும், கவனமாயும், ஆவலாயும் அவ்வுபந்நியாசஞ் செய்வோன் வதனத்தையே உற்று நோக்கிய வண்ணமாக விருந்தனன். இளம்பிராயத்தில் இவன் கண்டமாலை போன்ற ஒரு கடுநோயாற் பீடிக்கப்பட்டு முகமும் கறுத்து ஒரு கண் ஒளியும் மழுங்கியது. தாயார் துயருற்று இந்நோய் தீர சிகிச்சையாதேனுமுளதோ வென் விசாரிக்கு மளவில் அக்காலத்து ஜனங்களுக்கு மூடபக்தி விசேஷமாய் இருந்ததால் சிலர் சொற்படி குழவியை அரசன்பால் விடுத்து தொடப்பெற்றால் சவுக்கியமடையுமென்று நம்பி அப்போது இங்கிலாந்து மஹாராணியான ஆன் (Anne) என்பவளிடம் வந்தடைந்தனள் அக்காரிகை தன் தடங்கையாற்றடவினும் சிறிதும் பயன்படவில்லை. என்றாலும் இதைப்பற்றி பிற்காலத்தில் ஜான்சனை சிலர் கேட்டதற்கு தன்னை சிறுவயதில் கறும்பட்டாடையுடுத்தி வைரப்பூணாரம் பூண்ட ஒரு சீமாட்டி தடவிக்கொடுக்கும் பாக்கியத்தை பெற்றேனென்று புகழ்ந்துகொண்டாடினார். கல்வி பயிலகனமிகுகாரிகையால் கற்பிக்கப்பட்டுவரும் கல்லூரியில் காதலோடு வந்தடைந்தனன். ஒருநாள் தன்னை வழக்கமாய் அழைத்துக்கொண்டுபோக வருகிற வேலைக்காரன் பள்ளிக்கூடம் கலைந்து பிறகு வந்ததால் தனிமையாய் வீட்டுக்குப்போக நேரிட்டது. போகும் பாட்டையில் சாக்கடைகளைக் கடந்து செல்ல வேண்டியிருந்ததால் குனிந்துகொண்டே ஒற்றைக் கண் பார்வையுடன் தரையைக் கீழ்நோக்கிச் சென்றனன். இதைக் கண்ணுற்ற அவனுடைய ஆசிரியர் எதிர்படும் வண்டிகளாலாவது மற்று இன்னும் வேறெவ்விதத்தினாலேயும் இடுக்கண் நேரா வண்ணம் தன் மாணாக்கனைப் பின்பற்றி சென்றனர். இதைக் கடைக்கண்ணாற் கண்டு கடுஞ் சினங்கொண்டு கண் பொட்டையென்றல்லவோ தன்னைப் பின்றொடர்ந்து வருகிறாரென ஐயுற்று அக்கல்லூரித் தலைவியை கண்ணில் தீ பறக்க உற்று நோக்கினன். இதனால் அப்பாலகனது நாணமுடைமையின் சிறப்பும், பிறர் தன்மீது குறை கூறுதலைச் சகியானென்பதும் விளங்கிற்று. ஆங்கிலமைய்யமறக் கற்றுணர "டாம் ப்ரவுன்" (Tom Brown) என்ற ஆசாரியரிடம் சிலகாலமிருந்து இலத்தீன் பாஷையைக் கற்க 1719-௵ ஒரு கலாசாலைக்குச் சென்றான். இவன் இரண்டாண்டு பயின்ற பிறகு தலைமை உபாத்தியாயரால் உபதேசிக்கப்பட்ட ஒரு உயர்ந்த வகுப்புக்கு மாற்றப்பட்டான். இவர் பிரம்பெடுத்தடிப்பதில் பிரபல பாண்டியத்தை யுடையவரே ஒழிய கற்றுக்கொடுப்பதில் கைதேர்ந்தவரல்லரெனக் குறை கூறினான். என்றாலும் இவரிட முள்ள பிரீதியால் இலத்தீன் பாஷையை நன்றாய் கற்றுக்கொள்ள விடமுண்டாயிற்றென்றும், தான் இவ்வாறடி படாவிட்டால் தனக்கு அப்பாஷை வந்திராதென்றும் வற்புரித்துக்கூறினர்.

பிள்ளைகளைச் சிறிதளவு அடிப்பதால் குணமுண்டென்ற கொள்கைக் கிசைந்தவர். "அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகரும்" என்ற பழமொழி நம்மவருள்ளும் வழங்கி வருவதைக் காண்க. வகுப்பில் மற்றப் பிள்ளைகளோடு பேசினதற்கும் அவர்களுடைய கவனம் பாடத்தில் செலுத்தாமல் தடை செய்ததற்கும் தண்டிக்கப்பட்டதே யொழிய மற்றெவ்விதமாயும் கண்டிக்கப்படவில்லை யென ஜான்சன் சொல்லிக்கொள்வது வழக்கம். இயற்கையாய் சோம்பற்குண முடையோனாயினும் கீர்த்தி பெற வேண்டுமென்ற அவாக்கொண்டவன். இவ்வெண்ணம் உதிக்கப் பெற்றமையின் பிற்காலத்தில் பிரபல வித்வானாய் புகழ் பெற இடமுண்டாயிற்று.

கண்ணைக்கெடுத்த தெய்வம் மதியைக் கொடுத்தாற்போல் கண் ஒன்று ஊனமானதின் நிமித்தம் தன் தோழர்களோடு விளையாடுவதற்கில்லாமற் போகவே படிப்பிலேயே காலங்கழிக்கத் தலைப்பட்டான். பண்டையக் கட்டுக்கதைகளைக் கற்றுணர்வானாயினன். இவற்றைத் தன் ஜீவ திசைவரை கற்க பேரவாக்கொண்டனன். ஆதலின் மற்றெவற்றின் மீதும் பற்றற்றவனாய் சித்த சுத்தி வேறுபாடடைந்து யாதேனுமொரு ஜீவனோபாயத்துறையில் இறங்க முடியாமற் போயிற்றே யென துயநற்றனன். அளவற்ற இடுக்கண்கள் உறினும் தினையளவும் கலங்கா நெஞ்சத்தனாய் கல்வியைப் பெரிதாக உன்னிப்பயின்று வந்த வகை வியக்கத்தக்கதே.

"முடிவு மிடையூறு முற்றியாங்கெய்துப் படு பயனும் பார்த்து செயல்."—(குறள்). பிரதிதினமும் விசித்திர கற்பனைக் கதைகளை (Romances) ஒரு முறை வாசித்து அவற்றை மனதில் பதியும் வண்ணம் செய்ய உன்னிப் பகற்பொழுதிலேயே கனாக்காண்பவன்போல் தானே வாயில் 'பிதற்றிக்கொண்டு ஒரு தோழனோடு வெளியே உலாவப்போவதுண்டு.

அவனுடைய ஞாபக சக்தி யாவரும் கண்டு பிரமிக்கும்படி அவ்வளவு மேற்பட்டதாகவும் தான் கற்றது அல்லது கேட்ட யாவையும் எவ்வமயத்தில் கேட்டபோதிலும் முன்பின் யோசனையின்றி எடுத்துச் சொல்லும் ஏற்ற முடையதாக விருந்தது. இவரைப் பற்றிப் பள்ளிக்கூட தோழர் ஒருவர் பேச நேரிட்டபோது தான் ஒருக்கால் 18 செய்யுட்களை படித்துக்கொண்டு வந்ததைக் கேட்டுக் கொண்டிருந்த ஜான்சன் அவைகளைச் சற்று நேரத்திற்கெல்லாம் முழுமையும் திருப்பிச் சொன்னதாகவும் ஏதோ ஒரு வரிமாத்திரம் சிறிது மாற்றினதாகவும் அவ்வாறு வேறுபாடாய்ச் சொன்னது அதில் உள்ளதைக் காட்டிலும் வெகு அழகாயிருந்த தெனவும் கூறியுளர். படித்த எதுவும் மனதை விட்டகலாதிருந்தமையின் அவன் பேரறிவு வளர்ந்தோங்கி வந்தன. இதைப் பள்ளித் தோழர்கள் பார்த்து வியந்து அவன்பால் அன்பும், பக்தியும் பெருகி பணிவிடை செய்யத் தலைப்பட்டார்கள். காலை வேளைகளிற் கலா சாலைக்குச் செல்லுங்கால் இவரை ஒரு பையன் முதுகின் மேற் சுமந்து கொண்டும், விழாதபடி இருபுறத்திலும் இருவர் கைலாகு கொடுத்துக் கொண்டும் இட்டுக் கொண்டு போவார்கள். மூடுபனி காலங்களில் ஒருநாள் பனியின் மீது சறுக்கி விளையாட அவாக்கொண்டு மிதியடியின்றி தன்னை இழுக்கும்படி ஒரு பையனைப் பார்த்து ஏவவே அவனதற்கிசைந்து அவன் இடுப்பைச் சுற்றி பலமான கயிற்றைக் கட்டி தன் முழு பலத்தோடு முக்கி முரண்டி இழுத்து திருப்தி செய்தான். சிறிது காலம் மர்மன இல்லத்திலிருந்து கொண்டு 'இலிச்பீல்ட்' பாடசாலையிற் படித்தான் பிறகு தகப்பனார் இவனை 'ஷராப்ஷயர்' (Shropshire) மாகாணத்தில் உள்ள 'நியூபோர்ட்' (New Port) பாடசாலையில் உதவி உபாத்தியாயனாகவும், மாணாக்கனாகவும் சேர்த்துக் கொள்ளும்படி தலைமை உபாத்தியாயரை வெகுவாய் இறைஞ்சினராயினும் அவர் அதற்குடன்படாமல் தனக்கு மனமில்லை என்று விடை பகர்ந்தனர். என்றாலும் இவர் ஜான்சன் மாணாக்கனாக தன்னிடத்தில் வரப்பிரியமிருந்ததென சொல்லிக் கொண்டு பிற்காலத்தில் பெருமை பாராட்டிக் கொண்டனர். இப்பள்ளியிற் சேர்க்க முடியாமற் போகவே ஊர்ஸெஸ்டெர்ஷயர் (Worcestershire) மாகாணத்திலுள்ள 'ஸ்டோன் பிரிட்ஜ்' (Stone-bridge) என்ற கல்விக்கழகத்திற்கு அனுப்பப்பட்டார். இங்ஙனே இரண்டாண்டு இருந்துகொண்டு சிறுபிள்ளைகளுக்கு பாடம் சொல்வதில் திறமை பெற்றார். தனக்கும் ஆசிரியருக்கும் மனமொவ்வாமையாற் பிணங்கித்தனதேயமடைந்தனன். வீட்டிலிருந்துகொண்டு கல்வியைக் கைசோர விடாமற் கற்றுணர்ந்து வருவானாயினன். இச்செய்தி தந்தையறியானாகி மகனைப் பார்த்து வீண்காலம் போக்குகிறாயென்றும், சோம்பறதன மேலிட்டிருக்கிறதெனவும் கண்டித்தார். ஜான்சனோ பண்டைப் புலவர்கள் வெளியிட்டுள்ள பலவிடயங்கள் பதிந்த காப்பியங்களை கற்றுத் தன் மனக்களஞ்சியத்தை நிரப்பிக்கொண்டு வருவானாயினன். "ஷராப்ஷயர்" மாகாணத்தில் உள்ள ஒரு உயர்தர கலாசாலைக்காவது அனுப்பலாமென்றாலோ தனக்கு சக்தியில்லையே என்று தகப்பனார் தபித்துக் கொண்டிருக்கையில் அந்நாட்டில் உள்ள சீரியர் ஒருவர் பாலகன் ஜான்சனைக் கண்ணுற்றுப் பிரியங்கொண்டு கல்வியைக் கசடறக் கற்றுணர 'ஆக்ஸ்போர்ட்' (Oxford) கலாசாலைக்குப் போக பொருள் உதவி புரிவதாக வாக்களிக்கவே 1728ளு அக்டோபர் மாதம் இறுதியில் அக்கலாசாலைக்கனுப்ப அவர் தகப்பனார் உவகை பூத்தார். ஜான்சன் ஊரைவிட்டுப் புறப்பட்டுப் போகிற சங்கதி கேள்வியுற்று ஓர் பெண் ஆசிரியர் தன்னிடத்தில் சிறிதுகாலம் மாணவனாயிருந்த காரணம் பற்றி அவனுக்கு ஆசி கூறி அனுப்பக்கருதி கையிற் சுவைப்பணிகாரம் ஒன்றை எடுத்துக் கொண்டு ஜான்சன் இல்லத்தை வந்தடைந்தனள். அப்பணிகாரத்தை அக்குழந்தை கையிற் கொடுக்க அவன் அதை அன்புடனேற்றுக் கொண்டு அருகாமையில் நிற்க பிதாவை நோக்கி என்னிடம் படித்த பிள்ளைகளில் இவன் மகா புத்திமானென உரைத்து ஆசீர்வதித்தனள். இதை ஜான்சனும் பிற்காலத்தில் மறக்காமல் புகழ்ந்து பேசி அக்கலைமாதை வெகுவாய்க் கொண்டாடினான். தந்தையும் தன் மகன் கல்வி கேள்விகளிற் சிறந்தவனென முன்னமே சிறிதளவு தெரிந்தவனாதலின் இன்னும் பதின்மடங்கு மனம் பூரித்தனன். தன் மகனையழைத்துக்கொண்டு அக்டோபர் மாதம் 31—ம் தேதியன்று 'ஆக்ஸ்போர்ட்' கலாசாலையைக் குறுகி நடுவு நிலைமை (Commoner) வாய்ந்த மாணவர்கள் பயிலும் 'பெம்ப்ரோக்' (Pembroke) காலேஜில் சேர்த்தனர். இவன் ஓராசியர்பால் விடுத்து இவனது வித்யாவிஷயத்தை கவனித்துவர ஏற்பாடு செய்ய அதிகப் பிரயாசைப் பட்டார். தகப்பனார் இவ்வூருக்கு வந்த அன்று சாயங்காலமே கலாசாலைக்கேகி அங்ஙனே கூடியிராநின்ற கற்றோர் குழாத்தின் முன்னிலையிற் கூசாமற் தன் மகன் கல்வி கேள்விகளிற்றிறமையுடையவனென செருக்குற்றோதினன். அவர்கள் இப்பாலகனது நவீன நடை உடைபாவனைகளைக் கண்ணுற்று சித்தங்கலங்கி சும்மாவிருந்தனர். அப்போது ஜான்சன் உரையாட நேரிட்டபோது தன் கல்வித் திறமையை ஒருவாறு காட்டக்கருதி தானே கசடறகற்றவைகளுட் சிலமேற்கோள்களடங்கிய அருமை வசனங்களைக் கழறலுற்றான். ஆசிரியரையே நாடி மெய்வருந்திப் பயில வேண்டுமென்றெண்ணம் கொண்டவனல்லவாதலின் ஜான்சன் ஆசிரியர்பால் கற்றுக் கொண்டவை அற்ப மெனவே கொள்ளல்வேண்டும். சேர்ந்த முதல்நாள் பள்ளிக்குக் கிரமமாய்ச் சென்று 4 நாள் போகாமலே வீட்டில் நின்றுவிட்டான். ஆறாம் நாள் வந்தபோது ஆசிரியர் என் வரவில்லையென்று வினவ அதற்குத் தான் சறுக்கி விளையாட தேவாலயத்திற்கருகே ஒருமைதானத்

திற்குச் சென்றிருந்ததாக விடைபகர்ந்தனன். இவ்வாறெடுத்துரைப்பது நன்மாணாக்கன் இயல்பல்லவென அப்பருவத்தே தனக்குப் புலப்படவில்லையென்றும் ஆனால் தனக்கு ஆசிரியர்பால் விஸ்வாசம் எள்ளளவும் மாறவில்லையென்றும் பிற்காலம் நவின்றனர். இவர் வாசிக்கும் 'பெம்பரோக்' காலேஜில் நவம்பர் மாதம் 5—ம் தேதி ஒரு விசேட நாள் கொண்டாடப்பட்டு வந்தமையின் ஜான்சனுக்கும் மற்றப் பிள்ளைகளுக்குப் போலவே வீட்டு அப்பியாசத்திற்கு "வெடிமருந்து வைக்கச் செய்தோர் கள்ளயூகம்" (Gunpowder Plot) என்கிற சரித்திர விஷயத்தைப் பற்றி எழுதிக்கொண்டு வரும்படியாய் ஆசிரியர் கட்டளையிட அவ்வாறு செய்ய சற்றும் கவனியாமல் தான் சொந்தமாய் கட்டிய சில கவிகளைக் காட்டி மன்னிக்கும்படி கேட்டுக்கொண்டனன். இவற்றைக்கண்டு ஆசிரியர் ஆனந்தங்கொண்டு 'போப்' (Pope) என்ற மகாகவிபாடிய 'மேச்சியா' (Messiah) என்னும் நூலை இலத்தேன் பாஷையில் மொழி பெயர்த்து கிருஸ்துப் பண்டிகைத் திருவிழாவன்று கொண்டுவரும்படி திட்டஞ்செய்தார். கலாசாலையிற் கையும் புஸ்தகமுமாயிருந்த காலையிலேயே கவி செய்யும் திறமை வாய்க்கப்பெற்றான். தன் சுதேசமாகிய 'இலிச்பீல்டில்' இருந்தகாலத்து அந்நாட்டிலுள்ள சில சீமாட்டிகள் சேர்ந்து "துயாமுற்ற தாய்" (The Distressed Mother) என்ற ஓர் நாடகத்தை ஆட எண்ணி ஜான்சனை அதற்கு ஒரு 'முடிவுரை' (epilogue) எழுதமன்றாட அவனுமதற்கிசைந்து வெகு அழகாய் எழுதிமுடித்தான். இவன் கீர்த்தி எங்கும் பரவ இடமுண்டாய் தான் படித்த சர்வ கலாசாலைவரை எட்டிற்று. வெகுகாலம் இவனை 'மனோன்மத்தம்' (Hypochondria) என்ற கடுநோய் பின்றொடர்ந்து வந்தமையின் அதை நிவிர்த்திக்கக்கருதி வைகறையில் வெகு தொலை வெளியே உலாவப் போவதும், இன்னும் இதைப் போன்ற தனக்குப் பிறரால் சொல்லப்பட்ட சிகிச்சைகளைச் செய்தும் யாதொரு பயன்படவில்லை. மனக்கவலை எய்தினனாய் ஒரு ஆயுள்வேத பண்டிதனைச் சார்ந்து தன் நோயின் கூறுபாடுகளையும், வெங்குறைகளையும் இலத்தீன் பாஷையில் வர்ணித்து வரைந்து காட்டினான். இதில் உள்ள ஆராய்ச்சித் திறமையும், சொல்லலங்காரத்தையும் கண்டு வியப்புற்று அவ்வாயுள்வேதபண்டிதன் தன் நேசர்களிடம் காட்டி மகிழ்ந்தனன். இதைக் கேள்வியுற்ற ஜான்சன் கடுஞ்சினங் கொண்டு தன் உள்மர்மத்தை வெளியிட்ட குற்றத்திற்காக அவரை மன்னிக்காமல் பலபேர் அறிய குறை கூறியும் வந்தனன். ஒன்பதாம்வயது முதற்கொண்டு தெய்வபக்தி குன்றி யாதினும் பற்றற்றவனாய் இருந்தான். ஆக்ஸ்போர்ட் (Oxford) கலாசாலைக்கு வந்த நாள் முதல் பக்திப் பிரதாபத்தைப் பற்றி தீர்க்காலோசனையில் ஆழ்ந்தவனாய் இறுதியில் செய்கடமைகளில் தெய்வாராதனை தான் முக்கியமென வோர்ந்து தன்னைப் பிறர் பார்த்து அனுஷ்டிக்குமாறு அவ்வளவு ஆசாரசீலனாய் விளங்கினான். கிரீக் பாஷையைச் சிறிதளவு கற்றுணர்ந்தான். 'மானத சாஸ்திரம்' (Metaphysics) பயின்று பண்டிதனாக வேண்டுமென்ற எண்ணம் இருந்தமையின் இதை விசேஷமாய்க் கற்று வந்தான். எந்நூலை எடுத்தாலும் நூன்முகம் முதல் நூலின் முடிவு வரை வாசிக்காமலே அதனில் படிந்திராநின்ற முக்கிய அம்சங்களை மாத்திரம் ஆராய்ந் தெடுக்கும் வல்லவனாதலின் கல்வி கேள்விகளிற் சிறந்தவனாய் பிற்காலம் இவற்றை உபயோகிக்கும் மேன்மையையும் பெற்றான். இக்காலத்தில் இவன்பால் சகிக்கவொண்ணா வறுமை நோய் அணுகிற்று. அப்போது இவனைப் பற்றி ஒரு கதை உண்டு. தினந்தோறும் தேவாலயத்தில் உபந்நியாசங்களின் கருத்தை எழுதி வாங்கிக்கொண்டுவர ஒரு போதகரிடம் போவதுண்டு. அப்போது இவன் உபயோகித்து வந்த மிதியடி பழையதாயும், தேய்ந்ததாயு மிருந்தமை பற்றி கால் விரல்கள் வெளியே விகாரமாய்த் தோன்றின. இதை அப்போதகர் ஒரு நாள் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்ததை யறிந்த ஜான்சன் அவரிடம் போக மனமில்லாமல் நின்று விட்டான். சிலர் இவனது நல்குரவை நோக்கி மனமிரங்கி புதியமிதியடி ஒன்றை அவனுடைய உபயோகத்திற்காக வீட்டு வாசற்படியில் வைத்துவிட்டுப் போயினர். அதைக் கண்டு வெகுண்டு அதை எடுத்து வெளியே எறிந்து விட்டான். சான்றோர் எவ்வகை மிடியாற்றுன்புறினும் நாணம் என்னும் அணிகலத்தைப் பூண்டு ஒழுகுவர். இக்கருத்து விளங்க நாயனாரும்.

"அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்
அஃதின்றேல்
பிணியன்றோ பீடுநடை"—என்றார்.

"நாம்பெழுந்து நல்கூர்ந்தா ராயினுஞ் சான்றோர்குர
[ம்பெழுந்துங்
குற்றங் கொண்டேறா—ருரங்கவரா
உள்ளமெனு நாரினாற் கட்டியுள வரையாற்
செய்வர் செயற்பாலவை" (நாலடியார்) :

கல்வி ஆக்கத்தை ஆதாரவாக்கொண்டு உலகத்தில் உஜ்ஜீவிக்க முயன்றான். 'ஆக்ஸ்போர்ட்' (Oxford) கலாசாலையிற் கைத்தின்மையாற் கஷ்டப்பட்ட போதிலும் கலங்காநெஞ்சமுடையானாய் காலங்கழித்து வருவானாயினன். தனக்குப் பொருள்உதவி புரிவதாக ஏற்றுக்கொண்ட கனவானும் சொன்ன சொற்றவறி யொழுகினமையின் படிப்பைப் பாதியிலேயே விட்டு B. A. பட்டமின்றி 1731 ஆண்டு தன் சுயதேசத்திற்குப் போகும்படி நேரிட்டது. இதனால் ஒரு தக்க அலுவலிலமர்ந்து ஊதியம் பெறவிடமில்லாமற் போயிற்று. தந்தையும இவ்வாண்டின் இறுதியிலே கடனிறுக்க சக்தியற்றவனாய் காலஞ்செல்லவே ஜான்சன் விசனக் கடலிலாழ்ந்தனன். ஒரு வேலையில் எங்கேயாவது போய் அமரவேண்டுமென பாஸ்வர்த் (Bosworth) என்னும் ஊரிலுள்ள

ஒரு பாடசாலையிற் கடையாசிரியத் தொழிலை மேற்கொண்டான். இவன் சிறிது காலந்தான் இருந்தபோதிலும் ஆராத் துயரமுற்று அகக்கிளர்ச்சியின்றி காலங்கடத்தினன், தன்றேயத்தனும் பள்ளித்தோழனுமான ஒருவன் பர்மிங்ஹாம் (Birmingham) என்னும் நகரில் இரணவைத்தியனாய்ப் புகழ்பெற்றிருக்கிறானெனக் கேள்வியுற்று அவனிடம் சென்றான். இங்ஙன மிருந்துழி 'வாரன்' (Warren) என்ற பிரபுவோடு அளவளாவி அவர் வேண்டுகோளின்படி "உலோபோ என்பவரால் இயற்றிய ஆபிஸீனியா ஆழியாத்திரை" (Lobo's Voyage to Abyssynia) என்ற நூலை மொழிபெயர்த்து வசன நடையில் வரைந்தனன். ஜான்சன் இயற்றிய இம் முதனூல் இலந்தன் மாநகரில் பிரசுரிக்கப்பட்டு பரவலாயிற்று. போர்டர் (Porter) என்ற வேறொருகனவானையடுத்து அவர் காலஞ்சென்றதன்மேல் அவருடைய தாரத்தை 1736-ம் ஆண்டில் புன்ர்விவாகம் செய்துகொண்டு தன் சொந்தத்தில் கல்விக்கழகம் ஒன்றை இலச்பீல்டில் (Lichfield ஸ்தாபித்தார். இது சரிவர நடந்தேறிவாராமையின் இவ்வூரைவிட்டு அடுத்த ஆண்டு 1737-ல் இலந்தன்மா நகருக்குப்போந்து அங்ஙனம் அதிகபிரசித்தமாய் பிரசுரமாகிவரும் சஜ்ஜன சஞ்சிகை (Gentleman's Magazine) என்ற பத்திரிகைக்கு பலவிஷயங்களைப் பற்றி எழுதி வருவானாயினன். அக்காலத்தில் உள்ளோர் அவற்றைப் படித்து களிப்புற்று மிகக் கொண்டாடியதால் அவனுடையபெயர் எங்கும் பரவலாயின. இதனைக் கேள்வியுற்றுத் தன்முதுமைப் பருவமணுகுமளவும் கிரந்த கர்த்தாவாகவே இருந்து காலக்ஷேபஞ் செய்யக்கருதினான். 'புலவர்சரித்திரம்' (Lives of the Poets) என்ற ஒரு பிரபந்தத்தை எழுதிமுடித்தார். இதில் புலவர்களின் வரலாற்றுடன் முக்கியமாய் அவர்களுடைய குறை குணங்களை எடுத்து விளக்கினமையின் "குறை குண நூல்" என்றே கொள்ளல் வேண்டுமென தம் அபிப்பிராயத்தை வெளியிட்டுள்ளார். இந்நூலின்கண் சொல்வன்மையும், சொற்பொருளும், சொல்லலங்காரமும் காண விரும்புவோர் 'கவுலி' (Cowley), 'ட்ரையிடன்' (Dryden) 'அடிசன்' (Addison) 'போப்' ((Pope) என்ற புலவர்களைப் பற்றிப்படித்துவர விளங்கும். அககாலத்தி இங்கிலாந்து தேயத்தரசன் 1762-௵ல் இவருக்கு உபகாரச்சம்பளம் கொடுக்க உத்தரவு செய்தார். டப்லின் (Dublin) நகருத்து திரினிடி (Trinity) காலேஜ் சங்கத்தார் இவருக்கு L.L.D பட்டம் அளித்தார்கள். இவர் 75வயது ஜீவித்திருந்து 1784 ௵ டிசம்பர்மாதம் 13-ம் தேதி உயிர்துறந்து Westminister (வெஸ்ட் மினிஸ்டர்) என்ற இடுகாட்டில் அடக்கஞ் செய்யப்பட்டார். இவர் காலத்தில் இலந்தன்மாநகர் எவ்வாறாக விருந்ததுவென சற்றுவிவரிப்போம். இந்நாட்டிலுள்ளோர் கல்வியைக் கசடறக் கற்றுணர்ந்தோரையும், கவிஞர்களையும் தம்மாலியன்றளவு கைம்மாறு செய்யகனவினும் எண்ணாமல் காலக்ஷேபத்திற்கே கதியின்றி திக்கற்றவர்களாய் தபிக்கச் செய்ததுமன்றி எளனஞ் செய்தும் ஏசியும் வந்தார்கள். ஜானசன் அக்காலத்தில் அளவளாவிய நூலாசிரியரின் நல்குறவு நவிலவொண்ணா நிலைமையில் இருந்தது. ஜான்சன் இத்தகைய வறுமையால் வருந்திப்பிழைக்க வகையற்ற காலத்தும் வன்னெஞ்சனாய் தனனை பிற்காலத்தவர்கள் புகழ்ந்து கொண்டாடும்படியான கோட்பாடுகளைக் கைவிடாமல் காலங் கடத்திவந்தது விந்தையினும விந்தையே. நன்னெறியைவிட்டு நழுவாமலும, நலனுடைய நரர்களின் புன்னடைகளைப் போற்றாமலும் கல்வியையே பெரிதாக உன்னி உன்னதபதவியடைந்தார். கல்விகற்றதன் பயன் கசடறவழியில் நிற்றல் என்பதை உணர்த்திக் காட்டினவருள் இவர் ஒப்பற்றவரென இவர்சரிதையால் விளங்குகின்றது. நாயனாரும் நாவலர்களின் நல்விசையை நாட்டக்கருதி "உவப்பத்தலைக் கூடியுள்ளப் பிரிதலனைத்தே புலவர் தொழில்." என்று கூறி யிருததலைக்காண்க: இவர் இயற்றிய முக்கிய நூல்கள்:—

1. ஆங்கில அகராதி. (English Dictionary.)
2. மானிடவீண் எண்ணம் என ஓர் அகவல். (Vanity of Human Wishes.)
3. கடமைப் பிரதாபத்தை குறிக்கும் ஓர் நூல். (*Irene* a work on sense of Duty.)
4. பலவியாசங்க ளடங்கிய Rambler என்னு மோர் நூல்.
5. தத்துவத்தைவிளக்கும் Rasselas கதை.
6. புலவர்சரித்திரம் (Lives of the Poets.)

முற்றிற்று.

ஏ. கே. சிவராமய்யர்

## On Devotion and Love.—To Parents.

## பக்தி சிரத்தை.—IV

(முன் தொடர்ச்சி.)

முந்தி மாதா பிதாக்களிடத்தில் செலுத்த வேண்டிய பக்தி முறையைப் பற்றிய திருஷ்டாந்தத்தையும் பிந்தி குருவினிடத்தில் செலுத்த வேண்டிய பக்தி முறையைப்பற்றிய திருஷ்டாந்தத்தையும் ஒருவாறு கூறினோம். இனி ஈஸ்வரரிடத்தில் செய்ய வேண்டிய பக்தி முறையைப்பற்றிய திருஷ்டாந்தங்கள் பல விருந்தாலும் சிற்சில கூறி முடிப்பாம்.

பிரகலாதனை நோக்கி, நீ சொல்லிய ஹரி யென்பவன் எவ்விடத்திலிருப்பானென்று இரணியன் கேட்டதற்கு, பிரகலாதன் அந்த பரமாத்மன் அகண்டிதனாகையால் அவனை இன்ன விடத்திலிருப்பான், இரானென்று கண்டிதப் படுத்திச் சொல்ல முடியாது. ஆயினும் அவன் ஒரு சாணளவாகிய சிறிய துரும்பினும், ஓரணுவைச் சதகூறு செய்து பார்த்தால் அக்கூறுகள் ஒவ்வொன்றிலும் தனித்தனி இருப்பான். அன்றியும் பெரிய மேருமலையிலுமிருப்பான். இங்கே நிற்கின்ற தூணிலுமிருப்பான். நீ சொன்ன சொல்லிலுமிருபபான். அவனில்லா விடமில்லை. அறிய வேண்டுமாகில் தாமதியால் சோதித்துப் பாரென்றான்.

தேவர்களுக்கும் உனக்கும் ஒரு தன்மையாய் இவ்வுலகமெங்கும் நிறைந்திருக்கும் ஹரி யென்பவன் மற்ற விடங்களி லெல்லா மிருப்பானென்பது அப்படி யிருக்கட்டும். இத்தூணினிடத்திலு மிருக்கிறானென்று நீ சொன்னமையால், அதனிடத்தில் நான் காணும்படி அவனை பிரத்தியக்ஷமாய்க் காட்டவேண்டும். காட்டாமற் போவையானால் மஸ்தகத்தையுடைய யானையைச் சிங்கமானது அறைந்து கொல்வதுபோல உன்னைக்கொன்று, என் பசி தீர உன்னுடலைத் தின்று, உதிரத்தைக் குடித்து, தாகத்தைத் தணித்துக் கொள்ளுவேனென பிரதிக்கினை பண்ணினான் இரணியன்.

அபபிர திக்கினையைக் கேள்வியுற்ற பிர்ம ஞானியாகிய பிரகலாதன் —

"என்னுயிர் நின்னாற் கொல்தற் கெளியதொன்
[றன்றியான் முன்
சொன்னவன் தொட்டதொட்ட விடந்தோறுந்
[தோன்றானாயின்
என்னுயிர் யானே மாய்ப்பன் பின்னும் வாழ்
[வுகப்பனென்னின்
அன்னவற் கடியனல்லே னென்றனனறிவின்
[மிக்கான்."

இப்படி பிரகலாதன் செய்த உறுதி மொழியைக் கேட்ட இரணியன் அதிக உக்கிரத்துடனே தனக்கெதிரே யிருந்தவச்சிரத் தூணில் வெற்றிபெற்றுப் புகழ் விளங்கிய தன் கையால் அறைந்த மாத்திரத்தில் சர்வாந்திரியாமியாகிய பகவான் சிங்க வடிவு கொண்டு ஆவிர்ப்பவித்து அத்தூணைப்பிளந்து அகிலபுவன சராசரங்களும் திடுக்கிடும்படி கல கல வென்று நகைத்து இரணியனை வதைத்து, பிரகலாதனை நோக்கி, அப்பா குழந்தாய்! என்னைப்பற்றி ஜன்ம சத்துருவாகிய இரணியனால் படாத பாடும் பட்ட உனக்கு நானென்ன செய்யப்போகிறேன். வேண்டிய வரத்தைக்கேளென்ற சமயத்தில். —

"முன்பு பெறப்பெற்ற பேறே முடிவில்லை
பின்பு பெறும் பேறு முண்டோ-பெறுவே
[னேல்
என்பு பெறாத இழிபிறவி யெய்திடினும்
அன்புபெறுகை யரும்பே றெனக்கென்றான்."

பிரகலாதன் அஞ்சலியஸ்தனாய் சுவாமிக்கு முன் நின்று ஓ பக்தரக்ஷகா! பரமதயாளா! அடியேனுக்கு வேண்டிய பேறெல்லாம் இப்பொழுது நீர் அருளிச் செய்வதாகக் கேட்கச் சொன்னமையால், என்ன பெறவேண்டுமென்று கேட்பேன்.

அனாதியில் நான் மூலப்பிரகிருதியில் அழுந்தி ஜீவாத்ம பரமாத்மஸ்வரூபமும், அவ்விரண்டுக்குமுள்ள சம்பந்தமும், அச்சம்பந்தத்தைத் தடுக்கும் விரோதமும், அவ்விரோதத்தை நிவர்த்திக்கும் உபாயமும், அவ்வுபாயத்தைச் செய்தவிடத்து அடையும் பரமார்த்தமும், இன்னவென்று விளங்காமல் நாசத்தை யடைந்திருக்கையில், நீர் ஏது கிருபையினாலே கர சரணாதி அவயவங்களைத் தந்து வேதாகமங்களைக் கொண்டு மேற்சொல்லிய ஸ்வரூப முதலியவைகளையும் தெளிய விளக்கி, உம் திருவடியில் சரணாகதி பண்ணுவதற்கேற்ற சேஷத்துவம் தலையெடுத்து, அபார தந்திரனாகி உம் கைங்கரியத்தை இப்பிறப்பில் இடைவிடாது செய்து உஜ்ஜீவிக்கும்படி நீர் அனுக்கிரகிக்க, அவ்வாறு அடியேன் முன் பெற்ற பேறுகளுக்கோ முடிவில்லை. அவையன்றி இனிப்பெறும் பேறுகளும் வேறுண்டோ? அப்படியே யிருந்து பெற விரும்புவேனாகில், பூர்வ கர்ம சேஷத்தால் இன்னும் கால சககரத்திலகப்பட்டு இவ்விருள்தரு மாஞாலத்தில் எண்ணிறந்த ஜன்ம மெடுத்து உழலவரினும் அஞ்சுவேனல்லேன் எல்லாப் பிறவியினும் தாழ்வாகிய சாக்கடைச் சேற்றில் கிடந்து நெளியும் புழுவாம் பிறப்பைப் பெற்றாலும் உம் திருவடிக்கண் மாறாத அனபு செலுத்தப் பெற்றால் அதுவே சற்பக்தியை யுண்டாக்கும். சற்பக்தியே சற்கர்மத்தை யுண்டாக்கும். சற்கர்மமே சற்போதத்தை யுண்டாக்கும். சற்போதமே வீடடைவிக்கும். அதுபற்றி இயம நியமாதிகளாகிய அஷ்டாங்க யோகமும், அணிமா மகிமா முதலாகிய அஷ்டமகா சித்தியும், மற்றுமுள்ள பலவகைப் பேறுகளும வேண்டுவேனல்லேன். அவ்வன்பொன்று

மட்டும்பெறுவதேநாயேனுக்கு அரியபெரியபேறும். அதையே அருளிச் செய்யவேண்டுமென பிரார்த்தித்தான். ஆகையால் அன்பே பக்தி என்று கொள்ள வேண்டும்.

பக்தியில் கரை கண்டவரும், நீச ஜாதியில் பிறந்தவரும், திருநாளைப்போவாரென்னும் திருநாமம் படைத்தவருமாகிய நந்தனரை தன் பண்ணையத்தில் வைத்துக்கொண்டிருந்த வேதியர், திருப்புன்கூரில் இவருக்காக சிலையான நந்தியை விலக்கி தர்சனங் கொடுத்ததும், அவ்விடத்தில் ஒரு குளமுண்டாக்கியதும், ஒரு இரவில் நாற்பது வேலி நிலமும் நட்டு அறுக்கத் தயாராயிருந்ததும், கேள்விப்பட்டும், நேரில் கண்டும், ஆனந்தங்கொண்டு இவரிடத்தில் விஸ்வாசம் அதிகரித்து, ஏ! நந்தனரே, எனக்கு நீரே குருவாகி நின்று உபதேசம் பண்ணவேண்டுமென்று கேட்க நந்தனர் வேதியர் வார்த்தையைத் தள்ள மாட்டாமல் அவரைப் பிரதக்ஷணஞ் செய்து ஒரு மூலையை நோக்கிச் சொன்ன—

## கீர்த்தனம்.

### பல்லவி.

ஐயே மெத்தக்கடினம் உமக்கடிமை
ஐயே மெத்தக்கடினம்.

### அனுபல்லவி.

பொய்யாத பொன்னம்பலத்தையா இருக்குமிடம்
நைப்பாத மனிதர்க் குய்யாதுகண்டுகொள்ளும் (ஐயே).

### சரணங்கள்

பாலகிருஷ்ணன் பணிந்திடு சீலகுரு சிதம்பரம்
மேலே வைத்த ஆசையாலே காலனற்றுப் போவானென்று
சாத்திரம் - நல்லக்ஷேத்திரம் - நிர்பாத்திரம் - ஞானநேத் திரங்கொண்டு
வாசியாலே மூலக்கனலில் வீசியேசுழன் றுவரப்
பூசைபண்ணிப்பணிந்திடு மாசறக்குண்டலியைவிட்
டாட்டுமே - மனமூட்டுமே - மேலோட்டுமே - வழிகாட்டுமே! —இங்க
மானபிமானம்விட்டுத் தானாகிநின்றவர்க்குச்
சேனாதிபதிபோல ஞானாதிபதியுண்டு
பாருமே - சுட்டிக்காருமே - உள்ளேசேருமே - அது போதுமே! —அங்கே
சங்கையறவேநின்று பொங்கிவரும்பாலுண்டு
அங்கமிளப் பாறிக்கொண்டு தங்க பொம்மை போலவே
நில்லுமே - ஏதுஞ்சொல்லுமே - ஞானஞ்சொல்லுமே - யேதும் வெல்லுமே!

அட்டாங்கம் பண்ணினாலும் எட்டாங்குபண்ணியது
கிட்டாது கிட்டிவரவொட்டாது முட்டியது
பாயுமே - முனைதேயுமே - அது ஓயுமே - உள்ளேதோயுமே!— வேத
பத்திரத்திலே யாடமெந்திரத்திலே போர்க்குந்
தந்திரத்திலேயுமில்லை அந்தரத்திலேபவ
தானமே - அதுதானமே - மலஹீனமே - பேசாமோனமே!— அந்த
முப்பாழுந் தாண்டிவந்து அப்பாலே நின்றவர்க்கு
இப்பார்வை கிடையாது அப்பாலே திருநடன
மாடுவார் - தாளம்போடுவார் - அன்பர்கூடுவார் - இசைபாடுவார்! —இதைக்
கண்டாருங்கிடையாது விண்டாருஞ் சொன்னதில்லை!
யண்டரண்டகோடியெல்லா மொன்றுப்ச்சமைந்திருக்கு
மல்லவோ - அதைசொல்லவோ - பறையன்சொல்லவோ!
சொல்லவோ நேரமாகுதல்லவோ! ... ... ... (ஐயே)

இதிலுள்ள கருத்துகளைப் படிப்பவர்கள் தாமே அந்தர்முகத்திலிருந்து ஆத்மத்யானத்தாலறிந்துகொள்ள வேண்டுமாதலால் அப்படியே செய்வார்களென்று மேல்வரையாது விடுகின்றோம்.

T. C. வெங்கட்டரமணையர்.

## "THROUGH NATURE TO GOD."—"S. L. N. POOJA SPECIAL."

"Study of Motion by Itself."

*"Judge not lest ye be judged."—Jesus Christ.*

## யோகமார்க்கம்: "ச-ல-ந-சக்தி-பூஜை."—ஸர்வம் பிரம்மமயம்—சகஜநிலை.

"அருளெனும்பால் அன்பெனுந்தனநிறைந்து
தங்கியதால் துன்புற்றேன்"—ஸ்ரீதேவி (அருட்தாய்)

"சமாதிசெய்வார்க்குத் தகும்பலயோகஞ்
சமாதிகள்வேண்டா மிறையுடனேகிற்
சமாதிதானில்லை தானவனாகிற்
சமாதியிலெட்டெட்டுச் சித்தியுமெய்துமே."—திருமந்திரம்.

நந்தனார் வேதியர்க்குபதேசஞ்செய்தபடி அந்தர்முகத்தில் ஆத்மபூஜைசெய்து "முப்பாழுந்தாண்டிவந்து அப்பாலே நின்றவர்க்கு" (இகபரம் என்கிற பேதமாய்ப் பாவிக்கும்) "இப்பார்வைகிடையாது." அவர்கள் "அப்பாலே" (முப்பாழுந்தாண்டிநின்ற அருள் வெளியில்) "திருநடனம் ஆடுவார், தாளம் போடுவார்," (அன்பொடன்பாகிநிறைந்துள்ள) அன்பர் கூட்டத்தில் கூடுவார், "இசைபாடுவார்"—"இதைக் கண்டாருங் கிடையாது" 'விண்டாரும்' (வெளியிட வாய்திறந்தாரும்) "சொன்னதில்லை." அவர்களுக்கு "அண்டரண்டகோடியெல்லா மொன்றாய்ச் சமைந்திருக்கும்" 'அதை சொல்லவோ!'—'நேரமாகுதல்லவோ!'

மஹாத்துக்களெல்லாம் உண்மையுபதேசஞ் செய்வதிப்படித்தான். பரிபக்குவமில்லாதாரிடத்து உண்மை ஓட்டாது. பக்குவமுதிர்ந்த பக்தர்களுக்கு 'குருசொல் ஒரு சொல்' என்கிறபடி ஒரு வார்த்தை-ஒரு சங்கேதம்-ஒரு அடையாளம் (முத்திரை) போதும். மற்றவர்களுக்குச் சொல்லவென்றாலோ "நேரமாகுதல்லவோ!" மேற்சொன்ன 25-வரிகளில் 'குண்டலி சக்தியை மெல்லவெழுப்பி, ஆறாதாரங்களின் வழியாகவும் கொண்டுபோய், ஷடாதாரமுங் கடந்த துவெளியில் 25-தத்துவங்களுந்தாண்டி நித்த முத்த சுத்தராய் நிலைபெற்றிருக்கும் ஸதாசிவத்தோடும் சேர்த்து அவர்களுடைய ஐக்கியத்தில் தானும் கலந்து ஏகரஸமாய் அத்துவிதநிலைபெற்றுத் தரித்திருக்கும் மர்மம் முழுவதையும் சுட்டிக்காட்டிச் சொல்லிவிட்டார். அவதார புருஷனாகிய 'பாலகிருஷ்ணன்' (தான் ஜகத்ரக்ஷகனாயிருந்தும்) பணிந்திடும் 'சீலகுருசிதம்பரம்' ஆகிய சிதாகாசவெளியில் கலக்க அன்புவைத்தவர் அந்த அன்பு காரணமாகக் காலனை அற்றுப்போகச் செய்துவிடுவார்கள். இப்படிப்பட்ட அன்பினால் காலனைவென்றவர் மார்க்கண்டேயர். அவர் க்ஷேத்ரக்ஞர், அதாவது சுத்தாத்மன்: அவர் எடுத்த தேகமோ "நல்லக்ஷேத்திரம்"—பூர்வஜன்ம புண்ணியத்தால் சுபவாசனைகள் நிறைந்துள்ளது. அவர் (ஸத்-அஸத்பாத்திரபாவனை விட்டு ஸமதபசித்தராயிருக்கும்) 'நிர்பாத்திரமாகி' (விசாரசாகரத்தில் மூழ்கியெழுந்து கரைகண்ட) 'ஞானக்கண்கொண்டு' (அறிவே குருவாயமைய) ரேசக பூரக கும்பகரூபமான வாசிவித்தையாலே, மூலாதாரத்திலுள்ள ஆதிக்கனலை (மூலாக்நியை) ஜ்வலிக்கச்செய்து, அது அங்கேயே எரிந்தோய்ந்து சாம்பலாகாமல் சுழன்று மேலேறிவரும்படி குற்றமற்ற சுத்தவித்தையாம் அக்குண்டலிப்பாம்பைக் (மூலசக்திக்கு அடையாளம் பாம்பு) கிளப்பிவிட்டு ஆட்டினதுபோல் நீரும் ஆட்டும்.—அப்படி ஆட்டினாலோ அது விஷயப்பற்றும் விஷமேறி மயங்கிக்கிடக்கும் மனதிற்குத் தன் சக்தியை ஊட்டிப் புஷ்டியுண்டாகச்செய்து 'மேலேற்றும்' 'வழியும் காட்டும்.' இந்த நிலையில் 'மானாபிமானம் (ஆசை, பற்று) விட்டுத் (தன்மயமாய் ததாகாரமாய்) தானாகிநின்றவர்க்குச் 'சேனாதிபதிபோல ஞானாதிபதியுண்டு'; இதனுண்மையை உபதேசப்படி அனுஷ்டித்துவந்த அப்பியாசஅனுபவத்திலறிந்துகொள்ளலாம். 'சுட்டிக்காருமே'— இந்த ரகசியத்தில் லக்ஷியம் வைத்து இந்த உபதேசம் கைநழுவிப்போகாமல் காப்பாற்றிக்கொள்ளும். 'உள்ளே சேருமே'—அந்தர்முகத்தில் திரும்பித் தந்நிலையறிந்து சேர்ந்துநில்லும். "அதுபோதுமே!"

அப்படிச்சேர்ந்துநின்றால் 'அங்கே சமுசயங்களெல்லா மற்றுப்போய் நிற்கும் நிலையில், அன்பினால் உளம்பொங்கியெழும் (அருளெனும்) பால் (அமிர்தவருஷணி) சுரக்கும். அந்தப்பாலையுண்டு (பிராணதாரமட்டுமேயப் பிராணமயமாயுள்ள) உன்தேகம் இளைப்பாறிக்கொண்டு (விசிராந்தியடைந்து சாந்தோபசாந்தமாய்) 'தங்கபொம்மைபோல' ஹிரண்யகருப்பவாசியாய் நிற்கலாம். அப்படி ஹிரண்யகர்ப்பத்தோடொன் றுபட்டு ஹிரண்யமயமாய் நின்றால் அந்தநிலையில் ('அதுவானால் அதுவே சொல்லு' மென்கிறபடி) 'தானே தானய் நிற்க' 'ஏதும் சொல்லுமே,' 'ஞானம் சொல்லுமே' (ஸர்வஜ்ஞத்வம் உண்டாகும்) 'ஏதும் வெல்லுமே' (ஸர்வசித்திகளுமுண்டாம்.) இப்படி அன்பே பிரதானமாகக்கொண்டு செல்லும்வழியை விட்டு, தலை கீழாக நின்று என்ன பாடுபட்டாலும், 'அஷ்டாங்கயோகம்' எவ்வளவு செய்தாலும், (அக்குண்டலி சக்தி) 'நெட்டாங்கு பண்ணியது கிட்டாது;' இவ்வளவு தானே? இல்லை. வேறு எந்த உபாயங்களாலும் 'கிட்டிவர லொட்டாது—' (உண்மை நிலைசித்திக்காது செய்து தடுக்கும்.) 'முட்டியது பாயுமே' (சாதகமின்றிப் போவதுமட்டு மன்று; பாதகமும் செய்யும்.) என்னதான் மனதைக் கூர்செய்துகொண்டாலும் குண்டலி சக்தி கைவசப்படாவிட்டால் அது முனை தேய்ந்துபோம்; (புத்தி மழுங்கிப்போம்.) முயற்சி குன்றில் அது ஓய்ந்துபோம்; 'உள்ளே தோயுமே'—மறுபடியும் அயர்ந்து நித்திரை போய்விடும். மந்திர தந்திரங்களாலும், பஹிர்முக பூஜையாலும், வேதபாராயணத்தாலும் ஒன்றும் ஆகாது. அது அன்பு ஒன்றினாலேயே கட்டுப்பட்டு நிற்கும்: 'அந்தரத்திலேயே' கண்விழிப்பது; அதுதான் அதற்கு விழித்து விளையாடுமிடம்; அந்த அந்தரமோ எப்படிப்பட்டது? 'மலஹீன'மானது! 'பேசாத மோன'நிலையுமதுவே. அப்படிப்பட்ட 'சித் அம்பர' வெளியாகிய 'அந்தரத்தில்' எல்லாம் கைகூடிவரும். அந்த அருள்வெளி யெங்கே யிருக்கிறதென்றால், ஸ்தூல சூக்ஷ்ம காரணப் பாழ்களாகிய முப்பாழுந்தாண்டியுள்ளது. "அந்த முப்பாழுந் தாண்டிவந்து அப்பாலே நின்றவர்க்கு இப்பார்வை கிடையாது; அப்பாலே திருநடனமாடுவார், 'தாளம் போடுவார்'– (உலகத்தோடொத்துவாழ்வார்)-அன்பர்கூடுவார்-(இசையுட்சுவையாயிருந்து) இசைபாடுவார்." அதையெல்லாம் சொல்லமுடியாது! இன்னம் வளர்த்திச் சொல்ல வேண்டுமென்றால் "நேரமாகுதல்லவோ!" ஆதலால் சாத்தியமில்லை. ஆனால் முடிவென்ன?

"காரியமேழுங் கரந்திடுமாயையுட்
காரணமேழுங் கரக்குங்கடுவெளி
காரியகாரண வாதனைப்பற்றறப்
பாரணவுமுபசாந்தப் பரிசிதே!"—திருமந்திரம்.

ச=(சாந்தம், சாந்தி:, சாந்தா, ஸ்ரீ.) அத்துவிதப்பொருளாம் ஸ்ரீதேவியக்ஷரம் - அ௦. பீஜம்.

ல=(லோகம், விளைவுரூபம், லயம், ஒடுக்கம்.) லகீரார்த்தஸ்வரூபாக்ஷரம் - ல௦ பீஜம்.

ந=(ந, நான், நாம், ந௦, நஃ, நாயகி.) பூரணஹங்கார லக்ஷியாக்ஷரம் - ந௦ பீஜம்.

உபாஸனாரஹஸியம்:—அ௦ - பீஜம்; ல௦ - சக்தி:, ந௦ - கீலகம்.

'நான்' என்னும் ஜீவாஹங்காரத்தை 'ந௦' (ந+அஹம்=நானல்லாதபொருள்=நாயகி-தேவி) என்னும் பூரணஹங்காரமாக்கிக்கொண்டு அதைத் துருவமையமாகவும், ல௦ என்கிற பீஜாக்ஷரத்தால் பிருதிவியாத்மனை (ஸ்வயம்புலிங்கத்தை) சக்தியாகவும் (கயிறாகவும்) (மையத்திலிருந்து சுற்றுவட்டத்தைத் தொட்டோடும் ரேகையாகவும், radius), அம் என்னும் பீஜாக்ஷரத்தால் ஆகாசாத்மனை (ஆகாசலிங்கத்தை) அண்டாண்டகோடியெல்லாம் தன்னுளடங்கியுள்ள சுற்றுவட்ட (பீஜ) மாகவும் சிந்தித்துத் தன்மயமாயிருந்து ததாகாரத்தோ டொன்றுபட்டுச் சிந்திக்க அச்சிந்தனை பலித்து அதுவும் நழுவினவிடத்தில் 'ஸர்வம் பிரம்மமயம்' என்கிற மஹத்தான மாறாத சகஜநிலை சித்திக்கும். இதுவே நந்தனருபதேசித்த உண்மை; ஸ்ரீமத்சங்கரபகவத் பாதாசாரியஸ்வாமிகள் அனுபவித்த அனுக்ரஹநிலை; ஸ்ரீவித்தைமுடிவு; ஸ்ரீதேவியுபாசனை; ஸ்ரீலோகநாயகிபூஜை. குண்டலியோகம். இதற்கு அதிதேவதை ச்யாமளாதேவி சமேத ராஜராஜேஸ்வரியாம் அகிலாண்டகோடி பிரம்மாண்டநாயகி.

ஓ௦ நமோ நம:

## TAMIL PUBLICATIONS OF THE D. K. AGENCY.

# GODWARD HO!

## A SYMPOSIUM.

With an Exposition of Truth in the Light of Grace
According to the Spiritual Experience of a Child of God.
"Give me thy heart!" "Make me thy single refuge!
I will free thy soul from all its sins!"—*Sri Krishna.*
"I am the Way."—Christ.
"Look at Me."—*Sri Ramakrishna Paramahamsa.*
"நான்தான் சொன்னேனே வெளிமாசவிருக்கிறேன்—
என்று; இப்போ பார்"—*i.e.*, "I told you I am the
Light; Look at Me now"—*Sri Akhandananda.*
I am—God to the Godly; Christ to the Christian;
Budha to the Budhist; Unknowable to the Agnostic;
Nature to the Atheist Law to the Scientist; and Truth to All—
The End, the Aim, the Law of Life."—*Sri Akhandananda.*

ஆத்மவித்யாமஞ்சரி-ஆநந்தத்தாய்மொழி.

"This book is invaluable."—
The Swami Ramakrishnanandaji.

"I am able to discover in it the aspirations of a sincere seeker after a deeper knowledge of God."—Dr. Cuthbert Hall, Barrows Lecturer 1902-03, in the University of Chicago.

Specially issued for the Ananda Mission,

BY

SATYANANDA S. SARMA.

*Price 12 Annas. Crown quarto 100 pp.*
*Postage 1 anna extra.*

---

### The Viveka Chintamani Series.

## KAMALAMBAL
OR
## The Fatal Rumour
BY
**B. R. RAJAM AIYAR, B. A.**

*Second and Improved Edition.*

**கமலாம்பாள் சரித்திரம்.**

முன்னிலும் மேலான
இரண்டாம் பதிப்பு.

Paper Cover Rupee **1-4**. Cloth **1-8**
Postage Extra.

25 புஸ்தகம் ஒரே தடவையில் வாங்கும் வியாபாரிகளுக்கு மட்டும் 100-க்கு 10 தள்ளிக் கொடுக்கப்படும்.

## NOW READY FOR SALE,

Apply sharp—
To the Secretary, D. K. Agency,
Anandashrama, *Triplicane, Madras.*

---

*The Arudradarisanam special No. of 'Vivekachintamani' For 1904.*

## THE WORD OF THE LORD

BEING AN EPITOME OF THE **BHAGAVAT GITA**
As Revealed to the World by a Realised Soul.
A GODLY WOMAN'S GIFT TO THE FAITHFUL AND TRUE OF HER SEX AND HER CHILDREN.

விவேகசிந்தாமணி ஆருத்ராதரிசன சஞ்சிகை 1904.
பகவத்கீதை வசனம் என்னும்
**பகவத்கீதா ஸாரஸங்கிரகம்.**
ஸ்வானுபவச் செல்வியாம்
ஆவுடையாரம்மாள் அருளிச்செய்தது.
பக்தர்களுக்கும் பாலர்களுக்கும் பாராயண யோக்கியமானது
40. pp. விலை 6 அணா. தபாற்கூலி 6 பை.

---

கமலாம்பாள் சரித்திரம். Paper cover Rs. 1-4. Cloth Rs. 1-8
சாந்திமதி ரூபா 1-0-0. பார்யாதர்மம் ரூபா 1-0-0
விக்டோரியா மஹாராணி சரித்திரம் Cloth Rs. 1-4 Extra gilt Rs 1-6.
புத்தாத திவ்விய சரித்திரம். Cloth As. 14-0.
விவேகமஞ்சரி " " 14-0 Postage Extra.

---

## ENGLISH PUBLICATIONS.

Vernacular Studies in Madras:
With an Introduction by H. K. Beauchamp. Esq., Editor of the Madras Mail .. ... 4 as
Encouragement of Vernaculars ... 4 "
Religion and Ethics ... ... 1 an.
Some Social Problems ... ... ... 4 as.
The Crux of the Sanitary Problem, 6 Pies
Postage extra.

*Apply to the Secy.*, D. K. AGENCY.
*Triplicane.*

---

The MADRAS MAIL of 20th Oct says:—

THE "VIVEKA CHINTAMANI"

"This high-class Tamil periodical entered upon the twelth year of its existence a few months ago, and it has done much good work during this period to deserve the support of the Indian community. Mr. C. V. Swaminatha Iyer, its editor, has through his unaided exertions, brought the magazine to a high degree of literary merit. During the last year he has made religious philosophy a special feature of the journal and has contributed to its pages devotional writings particularly interesting to Hindu ladies He is about to issue a collection of philosophic poems in easy Tamil, popularising the teachings of the Advaita school."

The *Hindu* (Nov. 5.) remarks: "The Journal aims at supplying the crying need in the present one sided secular education by emphasizing the spiritual side of man's growth and stimulating enquiry and thought in that line on principles which are of universal application."